குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 38 ] காளயுக்தி ஆண்டு பங்குனித்திங்கள் 10—4—79 [ இதழ் 5



ஸ்ரீ அப்பர் சுவாமிகள் குருபூஜைவிழா 22—4—79

தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

—★—

ஆர்க்குக் கிடைக்கும்
அடியேன்முன் வந்துமறைக்(கு)
ஏற்கக் கருத்துக்(கு)
இசையவே — யார்க்கும்
தெரிவரியா வேதசிகை
சித்தா உரைத்தாய்
அரிஅறியாச் சொக்கநாதா.

— சொக்கநாத வெண்பா-51

ஆசிரியர் :-
வித்துவான்
இராமலிங்கத் தம்பிரான்
சுவாமிகள்

துணையாசிரியர் :-
மகாவித்துவான்
சி. அருணைவடிவேல் முதலியார்

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 38 | 10-4-79 | இதழ் 5

## உட்பொருள்

எண் பக்கம்

உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 38 | காளயுக்தி - பங்குனி - 10—4—79. | இதழ் 5

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியிணாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. —சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

## அறநிலையங்கள் நலங்காக்க அரசுக்கு வேண்டுகோள்

**அகக்காவல் :**

எந்த ஒரு அரசும் சட்டத்தின் துணைக்கொண்டு மக்களை மாண்புடையவர்களாக மாற்றிவிட இயலாது. மக்கள் நெஞ்சில் சட்டத்துக்குக் கீழ்ப்படியும் பண்பும், சமூகநலம் பேணும் பண்பாடும் உருவாகவேண்டுமானல் அரசுமட்டும் அதனைச் சாதித்துவிட முடியாது என்பதனை உலக அறிஞர்கள் பலகாலும் எடுத்துக்காட்டியுள்ளனர். சமயமும் சமயநம்பிக்கைகளும், இவற்றல் உண்டாகும் இயல்பான மனமாற்றமும், பண்பாடுகளுமே நிலைபேறுடையன. அரசின் முயற்சியில் சரிபாதிக்குமேல் சமய நிலையங்கள் பண்பாட்டு வளர்ச்சியில் பங்கேற்கின்றன. அரசு மக்களின் புறக்காவலையே பேண இயலும். சமயம் மக்களின் அகக்காவலை வற்புறுத்தி வழிகாட்டிக் காக்கிறது. அரசு சிறைகொண்டு காக்கிறது; சமயம்

திறைகொண்டு காக்கிறது. நிறைகாக்கும் காப்புத்தானே தலையானது என்கிறார் வள்ளுவர்.

**நாடறிந்த செய்திகள் :**

இந்த அரிய பணியில் 400 ஆண்டுகளாக அருந்தொண்டாற்றி மொழி, சமயம், தத்துவம், பண்பாடு, கலை, கலாசார வளர்ச்சிகளில் தன்னை அர்ப்பணித்துக்கொண்ட பெருமை தருமையாதீனத்திற்கு உண்டு. இருபத்தேழு திருக்கோயில்களை மிகச் சிறந்த முறையில் கண்ணெனக்கட்டிக் காப்பதோடு, தொடக்கக்கல்வி, உயர்கல்வி, கல்லூரிக்கல்வி முதலிய பொதுக் கல்வி நிலையங்களையும், தேவாரப் பாடசாலை, வேதசிவாகம பாடசாலை, சைவசித்தாந்த சாத்திரக் கல்லூரி போன்ற சமயக் கல்வி நிலையங்களையும் பல்லாண்டுகளாகப் போற்றிப் பராமரித்து, பல்லாயிரம் இளைஞர்களைப்பண்போடு உருவாக்கும் பணியிலும் தருமையாதீனம் தலைசிறந்ததொண்டாற்றிவருகிறது.

மேலும் தருமையாதீனம் சமயம், தத்துவம், கலாசாரம் போன்றனவற்றை ஆங்காங்கே பரப்பவேண்டி, தலைநகரங்களாக விளங்கும் சென்னை, மதுரை, திருநெல்வேலிபோன்ற இடங்களில் சமயப் பிரசார நிலையங்களை நிரந்தரமாக அமைத்துப் பணியாற்றிவருகிறது. மேலும், மக்கள் வாழும் இடங்கள்தோறும் சென்று சமயப்பிரசாரம் செய்ய ஊர்திகளை கொண்டும் பக்திப்பயிர் வளர்த்துப் பண்பாட்டைக் காத்து வருகிறது. இவை நாடறிந்த செய்திகள்.

**தடையும் தேக்கமும் :**

நிலவருவாயை நம்பி நடையிட்டுவரும் தருமையாதீனமும், ஆதீனத் திருக்கோயில்களும், கடந்த பதினைந்து ஆண்டுகளாக நில வருவாய் முறையாகக் கிடைக்கப்பெறாமையினால் நமது சமயம் மற்றும் சமூகக் கடமைகளைச் செவ்வனே நிறைவேற்ற இயலாது திகைத்து நிற்கின்றன என்பதனைப் பலமுறை அரசுக்கும், மக்களுக்கும் நாம் எடுத்துக்காட்டியுள்ளோம். தருமையாதீனம் ஆண்டு ஒன்றுக்கு அரசுக்கும் அறநிலையத்துறைக்கும் நிலவரி, நிலவரி சர்சார்ஜ், தணிக்கைவரி, மானியங்கள் என்ற வகையில் **ரூபாய் இரண்டுலட்சத்திற்குமேல்** செலுத்தவேண்டியுள்ளது. இவ்வாறு ஆதீனத்திருமடமும் திருக்கோயில்களும் செலுத்தவேண்டிய தொகைகளும் ஆண்டுக்கு ஆண்டு பல லட்சங்களாக வளர்கின்றன. கடந்த சில ஆண்டுகளாக ஆதீனமும், ஆதீனத்திருக்கோயில்களும் வருவாய் இழப்பால் நித்திய நைமித்திக பூஜைகள் நிகழ்த்தக்கூட இயலாததுடன், பணியாளர்கள் ஊதியமும் வழங்க இயலாது தடைப்பட்டுத் தேங்கிநிற்கின்றன. அரசுக்கு உரிய வரி முதலிய தொகைகளையும் முழுவதுமாகச் செலுத்த இயலாது தடைப்பட்டுநிற்கின்றன.

**நம்பிக்கையூட்டும் பேச்சுக்கள் :**

புதிதாகப் பொறுப்பேற்ற அ. அ. தி. மு. க. அரசும் அதன் முதலமைச்சர் மற்றும் அறநிலைய அமைச்சர் ஆகியோர் அவ்வப்போது பேசிய பேச்சுக்களும், விடுத்த அறிக்கைகளும் மீண்டும் அறநிலையங்கள் வாழ்வுபெறும் என்ற நம்பிக்கையினை ஊட்டுவனவாக இருந்தன. மாண்புமிகு முதலமைச்சர் பேசிய பேச்சின் ஒருபகுதியை 23—10—78 தினமணி வெளியிட்டிருந்தது. அப்பகுதி :

" நமது கோவில்கள், நமது கலைகள் - கலாசாரங்களின் சின்னங்களாக இருந்துவருகின்றன. மொழியையும் பண்பாட்டையும் கற்றுக்கொள்ளும் கல்லூரிகளாகவும் அவை விளங்குகின்றன. ஆயிரக்கணக்கான கைவினைஞர்கள் தங்கள் அன்றாட வாழ்க்கைக்குக் கோயில் வருமானத்தைத் தான் நம்பியிருக்கிறார்கள். அவர்களது உணவைப் பறித்து சிலகுத்தகைதாரர்களுக்குமட்டும் நன்மைசெய்வது எப்படிப் பார்த்தாலும் நியாயமாகாது. "

மேலும் முதலமைச்சர் அவர்கள் உண்மை நிலையைப் படம்பிடித்துக் காட்டுகின்றார் :

" குத்தகைதாரர்கள் குத்தகை பாக்கிகளைச் செலுத்தாமல் பெருந்தொகை நிலுவை இருப்பதால், பல கோயில்களில் கோயில் வருமானத்தை நம்பிப் பிழைப்பவர்களுக்கு உணவு அளிக்கமுடியாத நிலை இருந்துவருகிறது".

உண்மை நிலையை நன்கு அறிந்திருக்கும் முதலமைச்சர் அவர்களின் 8—1—79 தினமணிப்பேச்சு நம்பிக்கை ஊட்டுவதாக அமைந்தது:

" தமிழகத்தில் அதிகமான ஆலயங்கள் தஞ்சைமாவட்டத்தில் இருக்கின்றன. அந்த ஆலயங்களுக்குச் சொந்தமான நிலக் குத்தகை வசூலாகாத காரணத்தினால் ஆலய நிர்வாகம் செயல்பட முடியவில்லை. ஆலய ஊழியர்களுக்கு ஊதியம் கிடைக்கவில்லை. ஆலய நிலங்களின் குத்தகைதாரர்கள் எண்ணிக்கையைவிட ஆலயங்களில் பணியாற்றும் ஊழியர்களின் எண்ணிக்கை அதிகம், ......... அத்தனை ஊழியர்களையும் காப்பாற்றியே தீரவேண்டும். "

**அறநிலைய அமைச்சரின் அறிவிப்பு :**

இத்தகைய நம்பிக்கையூட்டும் முதலமைச்சர் அவர்கள் பேச்சோடு, அறநிலைய அமைச்சர் அவர்களின் பேச்சும் இந்நம்பிக்கையை

மேலும் வளர்ப்பதாக அமைந்தது. தினமலர் 24—7—78இல் வெளி வந்த அறநிலைய அமைச்சரின் உரை இதனை மெய்ப்பித்தது.

> "எந்த ஆலயத்திற்கும் நிலத்திலிருந்து கிடைக்க வேண்டிய வருமானம் ஒழுங்காகக் கிடைக்கவில்லை. 25 ஆண்டுகளில் அனேக நிலச் சீர்திருத்தச்சட்டங்கள் அமுல் படுத்தப்பட்டிருக்கின்றன. துரதிஷ்டவசமாக ஏற்படுத்தப் பட்ட நிலச்சீர்திருத்தச் சட்டங்கள் ஆலயத்தின் முன்னேற் றத்தைப் பாழ்படுத்திவிட்டன. அகில இந்திய அண்ணு தி. மு. க. அரசைப் பொருத்தவரையில் புராதன நினைவுச் சின்னங்களான இந்த ஆலயங்களைப் பாதுகாப்பதில் அக் கறை கொண்டிருக்கிறது."

இன்னும் கடுமையாக அறநிலைய அமைச்சர் பேசிய இடங்களும்கூட உள்ளன.

> "ஆண்டவனுக்குத் துரோகம்செய்ய நினைப்பது பெற்ற தாய்க்குத் துரோகம் செய்ய நினைப்பதாகும்."

> "தஞ்சை மாவட்டத்தில் பல கோயில்களில் விளக்கு ஏற்றக்கூட வழி இல்லாத நிலைமையை நாம் பார்க்கிறோம். ஆலயம் வளர்ந்தால்தான் கலை வளரும். தமிழ் வாழும், தமிழ்ப்பண்பு நிலைத்து நிற்கும்."

இவ்வாறு முதலமைச்சர் அவர்களும், அறநிலைய அமைச்சர் அவர் களும் அறநிலையங்களின் உண்மையான வளர்ச்சியில் கொண்டிருக் கும் நாட்டத்தினை அறிந்து மக்களும், அறநிலையங்களின் வளர்ச்சி யில் நாட்டமுடையோரும் கொண்டிருந்த நம்பிக்கையில் பேரிடி வீழ்ந்தது போலாயிற்று 17—2—79ல் அறிவித்த முதலமைச்சர் அவர்களின் ஒரு அறிவிப்பு.

**அரசுக்கு அளிக்கும் வேண்டுகோள் :**

சாகுபடியாளர் — நிலவுடைமையாளர் குத்தகைப் பங்கீட்டினை 60 – 40 என்ற விகிதத்திலிருந்து மாற்றி 75-25 என்ற புதிய சட்டம் கொண்டுவரப் போவதாக முதலமைச்சர் அவர்கள் அறிவித்துள்ளார் கள். இப்புதிய உத்தேச சட்டத்தால் ஏற்படும் விளைவுகளைக் கடந்த "ஞானசம்பந்தம்" இதழில் விரிவாக வெளியிட்டுள்ளோம். இது போது இதன் சாதக - பாதகங்களை விளக்கித் தருமையாதீனத்தின் சார்பில் தமிழ்நாடு அரசுக்கும், அதன் முதலமைச்சர் மற்றும் அறநிலைய அமைச்சர் ஆகியோர்களுக்கும் ஒரு கோரிக்கை விடுக்கப்

பட்டுள்ளது. இந்தக்கோரிக்கையை வாசகர்களின் பார்வைக்காகக் கீழே பிரசுரித்துள்ளோம். சமய நிறுவனங்களின் வளர்ச்சியில் நாட்டங்கொண்டுள்ள பக்தர்களும் அன்பர்களும் இவ்வகையில் அரசுக்குத் தங்கள் கருத்தினை ஒல்லும் வகைதெரிவித்து, நாடும் மக்களும் நலம் பல பெற்றுவாழவும், பக்தியும் பண்பாடும் பரவிச் செழிக்கவும், தமிழும் கலைகளும் தழைத்தினிது ஓங்கவும் உரியமுயற்சி மேற்கொள்வார்களாக.

**அறநிலையங்களுக்கு விலக்கு வேண்டும் :**

பண்டைக்காலத்தில் மன்னர்களும் அறஉணர்வு படைத்த மக்களும் நாட்டில் சமய உணர்வும் அறநெறியும் தழைப்பதற்காகவே மடாலயங்களுக்கும் தேவாலயங்களுக்கும் மனமுவந்து கொடுத்த நிலங்கள் தாம் அறநிலையங்களின் சொத்துக்கள். தெய்வகாரியங்கட்கும் மனிதப் பண்பாட்டை வளர்ப்பதற்கும் இந்தச் சொத்துக்களின் வருமானத்தைப் பயன்படுத்துவது குறிக்கோளாகும். ஆனல் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாகவே பல சட்டங்களின்மூலம் அந்தநோக்கமும் குறிக்கோளும் நிறைவேற்றமுடியாமல் படிப்படியாகக் குறைந்துவருகிறது. வரிமுதலானவைகளைக் கொடுப்பதற்குத்தான் வருமானத்தைச் சேகரம்செய்யமுடிகிறது. கடவுளுக்குச்செய்யும் வழிபாட்டிற்கோ சமய அறநெறிப் பண்பாட்டு வளர்ச்சிக்கோ சிறிதளவுகூட வருமானம் கிட்டவில்லை.

சாகுபடிதாரர்கள் வார விகிதம் இப்போது 60 ஆக இருப்பதை 75 ஆக உயர்த்தி நிலச்சுவான்தார் விகிதம் 40 ஆக இருப்பதை 25 ஆகக் குறைக்க உத்தேசம் என்று சட்டசபையில் முதலமைச்சர் அறிவிப்பாக வெளிவந்துள்ளது. சாகுபடிதாரர்களுக்கு ஆதியில் வார விகிதாசாரம் 35 ல் இருந்து 40 ஆகி, பிறகு 60 ஆகி, இப்போது 75 ஆகிறது. நிலச்சுவான்தார்களை இது மிகவும் கடுமையாகப் பாதிக்கும். அதிலும் தஞ்சை ஜில்லாவில் உள்ள அறநிலையங்கள் எல்லாம் நிலங்களின் வருமானத்தையேநம்பியிருப்பதால் அறநிலையங்களுக்குப் பாதிப்பு மிகக் கடுமையாக இருக்கும். நிலத்துக்குள்ள பலவிதமான வரிகள், விவசாய வருமானவரி, சர்வே வரி, பாசன வடிகால் அபிவிருத்தி வரி, மேலும் 'செஸ்' முதலான பல வரிகள் செலுத்த வேண்டிய நிலைமையிலிருக்கும் அறநிலையங்கள் மிகவும் கடுமையாகப் பாதிக்கப்படும். வாரம் பெறும் அளவு குறைக்கப்படுவதால் நிலத்துக்கு ஏற்பட்டுள்ள வரிகளைச் சாகுபடிதாரர்களையே செலுத்தச் செய்ய வேண்டிவரும். எப்படியோ 25 வார விகிதம் அமுல் செய்யப்படுமானல் அறநிலையங்களுக்கு இப்போதுள்ள எல்லாவரிகளில் இருந்தும் விலக்கு அளிக்கவேண்டிவரும். காண்டிரிபியூஷன், ஆடிட்பீஸ் செலுத்துவதிலிருந்தும் முழுவிலக்கு அளிக்கவேண்டிவரும். ஆகவே இச்சட்டத்தினல் அரசுக்கோ, சாகுபடிதாரர்களுக்கோ, நிலச்சொந்தக்

தாரர்களுக்கோ நன்மையேதும் இல்லை. எனவே, வர இருக்கும் சட்டத்தைக் கைவிடவேண்டும் அல்லது அறநிலையங்களுக்காவது அவசியம் விலக்களித்துக் காக்கவேண்டும்.

**சட்டம் இருந்தும் செயல்படவில்லை :**

நிலக்காரருக்கு வாரம் 60ல் இருந்து 40 ஆக நிர்ணயம் ஆன பொழுது அந்த அளவாவது வருமானம் கண்டிப்பாகக் கிடைத்து விடும் என்று அறநிலையங்கள் எதிர்பார்த்தன. ஆனல் நாளாவட்டத்தில் மகசூல் சரியாக இருந்த காலத்திலுங்கூட சரிவர அளக்காமலும் காலநிலை மாறுபாட்டால் மகசூல் பாதிக்கப்பட்ட காலத்தில் தள்ளுபடிக்கு ஆளுநரிலிருந்து எல்லா அதிகாரிகளுக்கும் ஆலயங்களுக்கும் மனுக்கள் எழுதிக்கொண்டும் குரல் எழுப்பிக்கொண்டும் சண்டித்தனம் செய்து வந்தார்களே தவிர; சட்டப்படி அல்லது நியாயப்படி வாரம் பிரிவினைக்கு சாகுபடி தாரர்கள் முன்வரவில்லை.

**தர உற்பத்தி நிர்ணயிக்கவேண்டும்:**

அரசு விதை, உரம், பூச்சி மருந்துகள் இவைகள் மூலமாகவும், மற்றும் பத்திரிகை வானெலி மூலமாகவும் பலசெளகரியங்களைச் செய்து கொடுத்தும் சாகுபடி தாரர்கள் தக்கபடி பயன் படுத்திக்கொள்ளவில்லை. அன்றியும் பாசன வசதி, வடிகால் வசதி ஏற்படுத்திக் கொடுத்தும் ஊக்குவித்தும் அதன் பயன்களைப் பெருமலும் உற்பத்தியைப் பெருக்காமலும், மேலும்மேலும் பல காரணங்களைச் சொல்லி உற்பத்தியைக் குறைத்துக்கொண்டே வருகிருர்கள். இதுகாறும் அரசு பலகோடி ரூபாய்கள் செலவு செய்தும் விழலுக்கு இறைத்த நீர்போல்தான் ஆகி வருகிறது. விவசாயிகளுக்காக நமது அரசு செலவு செய்வதுபோல் வேறு எங்கும் எந்த நாட்டிலும் இருக்கமுடியாது. அப்படிக்கு இருக்க, விவசாயிகளுக்குத் தரம் ஏக்கர் (Standard acre) நிர்ணயித்திருப்பது போல் கண்டிப்பாக தரஉற்பத்தியும்(Standard yield)நிர்ணயிக்க முன்வரவேண்டும். அதற்குரிய திட்டத்தையும் அரசு வகுக்கவேண்டும். தர உற்பத்திக்குக் குறைந்த சாகுபடிதாரர்கள் பேரில் நடவடிக்கையும் எடுக்கவேண்டும். அரசு ஊக்குவித்து உதவும் பலவித உதவிகளையும் அப்படியே சாகுபடிக்குப் பயன்படுத்தாமல் மற்ற காரியங்களுக்குப் பயன்படுத்தி நிலத்தைவீணுக்கி விளைவைக் குறைக்கிருர்கள் என்பது பரவலாக எல்லோரும் அறிந்ததே. இந்நிலைமாறி நன்னிலை எய்த தர உற்பத்தியை நிர்ணயித்து அதற்குள்ள வாரத்தைக் கொடுக்கும்படி அரசு ஏற்படுத்தினல் அதுதான் நாட்டிற்கும் மக்களுக்கும் செய்யக்கூடிய நன்மையாகும். மேலும் 48 லட்சம் விவசாயிகளில் 4 லட்சம் பேர் மட்டும் சாகுபடிதாரர்களாக இருப்பது 1971ம் வருடத்தின் புள்ளி அறிக்கை. அப்படி இருக்க அழும்பு செய்யும் சாகுபடிதாரர்களின் வாரத்தை உயர்த்துவதன் மூலம் நாட்டின் நன்மையோ மக்களின் நன்மையோ உயர்த்த முடியாது; உயரக்கூடியதுமல்ல.

**ஒற்றுமை குறைகிறது :**

மேலும் ஆலயங்கள் சட்டத்தை அமுல் செய்யமுடியாதபடி கூட்டம் சேர்த்து குரல் எழுப்பிக் கலவர நிலையை உண்டுபண்ணி ஏராளமான பாக்கிகளை இப்போது வைத்துள்ளார்கள். சாகுபடி தாரர்கள் தங்களுடைய வாரத்தைக் களத்துமேட்டிலேயே பகிர்ந்து கொடுக்கக்கடமையும், சட்டமும் இருந்தபோதிலும் அதன்படிசெய்யா மல் மகசூலை அப்புறப்படுத்தியும் சொந்தத்துக்குப் பயன்படுத்தியும் ஏராளமான பாக்கிகளை ஏற்படுத்திவிட்டார்கள். சிலகாலமாக ஏற்பட்ட சட்டங்கள்மூலம் ஆலயங்கள் பாக்கிகளை .வசூல்செய்ய நடவடிக்கை எடுத்தும் நடவடிக்கைக்கு ஏராளமானசெலவுகள் ஆயிற்றேதவிர இந்த நடவடிக்கைக்கு ஆனசெலவுகள் கூட வசூலிக்க முடியாமல் போயிற்று. இதனுல் ஆலயங்களின் பூஜை, நைவேத்தியம், பரிபாலனம் யாவும் மிகவும் பாதிக்கப்பட்டுவிட்டது. உற்பத்திக் குறைவுமட்டுமில் லாமல் குத்தகை சரிவர அளக்க வேண்டாம் என்ற அலட்சிய மனேபாவம் சாகுபடிதாரர்களுக்கு ஏற்பட்டுவிட்டது. பலசட்டங்கள் மூலம் நிலச்சுவான்தாரர்களுக்கும் சாகுபடிதாரர்களுக்கும் ஒற்றுமைக் குறைவு ஏற்பட்டு வேற்றுமை மனத்துடன் ஒருவருக்கொருவர் பகைமை வளர்ந்துவிட்டது. இதனுல் குற்றங்களும் அதிகமாகி விட்டன. பொருள் சேதமும் அதிகம் ஏற்படுகிறது.

**பொது நிலையங்களில் வேறுபாடு ஏன் :**

தேசீயவங்கிகளுக்கும் கூட்டுறவுஸ்தாபனங்களுக்கும் மற்றும் சிட் பண்டு முதலியவைகளுக்கும் அரசு கடன்களுக்கும் எல்லாச்சட்டதிட் டங்களிலும் விலக்கு இருக்கும்பொழுது இகத்துக்கும் பரத்துக்கும் பாடுபடும் மடாலயங்களுக்கும் தேவாலயங்களுக்கும் விலக்களிப்பதே முறையாகும். எந்தவித பிரதிப் பிரயோஜனமும் கருதாமல் பொது நன்மைக்கே பாடுபடும் அறநிலையங்களுக்கு ஏன் இந்த விதிவிலக்கும் சலுகையும் இருக்கக்கூடாது? இவை யாவும் பொது நன்மைக்குப் பாடுபடுவனதாமே? ஒரு கண்ணில் வெண்ணையும், ஒரு கண்ணில் சுண்ணும்பும் வைக்கலாமா? இப்போதுள்ள சட்டத்தில், விளைவு சரியாக இருந்தால் நிர்ணயப்படி குத்தகை செலுத்தவும் விளைவு சரியாக இல்லாத காலத்தில் கோர்ட் மூலம் களத்துமேட்டிலேயே வாரம் பிரித்துக்கொள்ளவும் சட்டவிதிகள் ஏற்பட்டிருந்தும் அவை களை அப்படியே அமுல்படுத்தும் அளவுக்கு நடைமுறை திட்ட வட்டமாக அமைக்கப்படாததால் அமுலாக்க முடியவில்லை என்று சட்டநிபுணர்களும் நீதிமன்றங்களும் அபிப்பிராயப்படுகின்றனர்.

**அறநிலையங்களுக்கு இருவகையிலும் இன்னல் :**

வாரக்குறைப்பு இம்மாதிரி 25 சதமாவதால் நிலச்சொத்துக்கள் வைத்துள்ளவர்களுக்கு நஷ்டமே தவிர லாபமில்லை. இப்போதுள்ள

நிலவிலைப்படி நிலங்களை விற்றுமுதல் செய்து அதனால் வரும் ஆதாயத்தை அப்படியே பாங்குகளில் முதலீடு செய்தால் எவ்வளவு வட்டி வருமானம் வருஷத்துத்துக் கிடைக்குமோ அந்த அளவு நிலத்திலிருந்து இப்போதுள்ள சாகுபடியாளர்கள் மூலமாக 25 வார விகிதத்தில் கிடைக்கும் தான்யம்வகையரு வருமானம் குறைவாகவே இருக்கும். இத்துடன் நிலத்துக்குள்ள அரசு வரிகள் (இப்போது மிக அதிகமாகி விட்டது) வேறு நிலக்காரர் கொடுக்கவேண்டும். அறநிலையங்களின் சாகுபடி நிலங்கள் மொத்த சாகுபடி நிலங்களின் புள்ளி விபரப்படி 4 சதவிகிதத்துக்கும் குறைவாகத்தான் உள்ளது. ஆகையால் 25 சதவிகிதம் அறநிலையங்களுக்கு அமுலாகாமல் விதி விலக்கு அளிக்கவேண்டும்.

**அறநிலையங்கள் செயல்பட வழிகாண்பீர் :**

இப்போது அமுலில் உள்ள வாரத்தைக் குறைக்காமல் கண்டிப்பாக அறநிலையங்களுக்குக் கிடைக்கும்படிச் சட்டத்தில் உள்ள குறைகளை நிவர்த்திசெய்து அறநிலையங்களுக்குக் கிடைக்கவேண்டிய அளவு நெல் முழுவதும் கிடைத்துவர ஏற்பாடு செய்யவேண்டும். அறநிலையங்களுக்குச் சேரவேண்டியதைச் சேர்க்காமல் தன் சொந்தத்துக்கு அதை எடுத்துப்போவது (கையாடல் செய்யும்) கிரிமினல் குற்றமாகும் என்று சாகுபடிதாரர்கள் நினைக்கும் அளவுக்கு தக்கவிதிகளை சட்டத்தில் அமைத்து தவறுபவர்களை அந்தப்படி நடவடிக்கை எடுக்கவும் எடுத்த பிறகு அவர்கள் சாகுபடி செய்யும் நிலத்துக்குத் தொடர்பு இல்லாது செய்யும்படியாகவும் சட்ட விதிகள் ஏற்பட்டால் தான் அவர்களும் சரியாக நடப்பார்கள். அறநிலையங்களும் வரவேண்டியதைப் பெற்று ஒரு அளவாவது பயன் பெற்று விளங்கும்.

**அறநிலையங்களின் கோரிக்கை :**

1. வாரக்குறைப்பு சட்டம் கொண்டுவருவது முறையாகாது. வந்தால் இந்த வாரக்குறைப்பு அறநிலையங்களின் நிலங்களுக்குப் பொருந்தாது என்ற விதிவிலக்கு அளிக்கவேண்டும்.

2. விதி விலக்கு அப்படி அளிப்பதில் சட்ட பூர்வ தடை இருக்கும் பட்சத்தில் அந்த நிலத்துக்குள்ள அரசு தீர்வை மற்றும் 'செஸ்' காண்ட்ரிபூஷன், ஆடிட்பீஸ், சர்சார்ஜ் முதலான எல்லா வரிகளையும் குடிகளே செலுத்தவேண்டும் என்று விதி செய்யப்பட வேண்டும்.

3. அறநிலையங்களுக்குள்ள நெல்லைக் களத்துமேட்டில் கொடுக்காமல் எடுத்துச் செல்வது கிரிமினல் குற்றம் என்றும், கொடுத்து

விட்டுத்தான் சாகுபடிதாரர்கள் தங்கள் பங்கை எடுத்துப்போகலாம் என்றும் சட்டத்தில் விதிசெய்யவேண்டும்.

4. அந்தந்த பசலியில் மகசூல் காலத்திலேயே அந்தந்தவருடக் கணக்குநேராகி, கொடுக்கவேண்டியபாக்கி என்ற பெயரே இல்லாமல் இருக்க தக்க விதிகள் சட்டத்தில் இடம்பெறச்செய்யவேண்டும்.

5. சாகுபடிதார் நேரில் சாகுபடி செய்யாமல் உள்குத்தகை விடுவதும் பராதீனம் செய்வதும் குற்றம் என்று சட்டத்தில் அமைக்க வேண்டும்.

6. செல்வம் தானாகவே ஊக்கம் உடையவனைத் தேடிச்சென்று அடைகிறது என்பதும், குடிகளிடத்துச் சோம்பல்குடிகொள்ளுமானால் அக்குடிமக்களையும் அவர்கள் வாழ்ந்து வரும் நாட்டையும் பகைவனிடத்தில் அடிமை ஆக்கிவிடும் என்பதும் திருவள்ளுவர் வாக்கு.

"ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையா னுழை"

"மடிமை குடிமைக்கண் தங்கின் ஒன்னார்க்கு
அடிமை புகுத்தி விடும்"

இக்கருத்துக்களை அரசு சிந்தித்துச் செயல்பட வேணுமாய்க் கோருகிறோம்.



---

## பார்வையாளர் குறிப்பு

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

### சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி தேவஸ்தானம்.

திருத்தருமையாதீனம் 26 ஆவது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் பெருங்கருணையினால் அன்பர்களுடன் தரிசனம் செய்யும் வாய்ப்பு அமைந்தது. ஒவ்வொரு சந்நிதானத்திலும் சிவாசாரியர்கள் அனைவரும் மிகவும் அன்பாக இருந்து சிறப்பான முறையில் தரிசனம் செய்து வைத்தார்கள். திருக்கோயில் மிகவும் சுத்தமாக இருந்தது. எல்லோருடைய மனத்தையும் கவர்ந்தது. திருக்கோயில் ஊழியர் பெருமக்கள் மிகவும் அருமையாக உதவிபுரிந்தார்கள்.

12—3—79 (S-d) மு. கண்ணப்பன்.

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

**26-ஆவது குருமகாசந்நிதானம்**

**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த**

**பரமாசாரிய சுவாமிகள்**

**9—3—79** அன்று

**தேரழுந்தூர் கம்பர் விழாவில் வழங்கியருளிய**

# ஆசியுரை

"நின்னுவார் பிறரின்றி நீயே யானாய்
நினைப்பார்கள் மனத்துக்கோர் வித்து மானாய்
மன்னானாய் மன்னவர்க்கோ ரமுத மானாய்
மறைநான்கு மானாய் ஆறங்க மானாய்
பொன்னானாய் மணியானாய் போக மானாய்
பூமிமேல் புகழ்தக்க பொருளே உன்னை
என்னானாய் என்னானாய் என்னி னல்லால்
ஏழையேன் என்சொல்லி யேத்து கேனே."

**சொல்லும் செயலும் :**

நம்நாட்டில் நல்லவற்றை நினைப்பவரும், நினைத்தாலும் தொடர்ந்து செயல்படுவோரும் அருகிக்கொண்டு வருவதைக் காணுகின்றோம்.

செயலைத் தொடர்ந்து செய்வோரும் அதன் முழுப்பயனை அடைகின்றாரா? என்றால் அதிலும் குறை இருப்பதைக் காண்கின்றோம். இவையெல்லாம் ஏன்? என்னும் கேள்வியை எழுப்பிப் பார்த்தால் விடை கிடைக்கும்.

எந்தச் செயலும் முழுப்பயனை அடைவதற்குத் தடைகல்லாக இருப்பது எது என்று அறியும் அறிவும், அவற்றை நீக்கிச் செயலாற்றும் ஆற்றலும், அதற்குத் தேவையான பொருளும் ஆக இம்மூன்றும் இருக்குமானால் நாம் நினைத்தபடியே செயலை நிறைவேற்ற முடியும்.

இம்மூன்றில் ஒன்று குறைகின்ற பொழுதும் அதனாலும் ஓர் இழப்பு ஏற்படத்தான் செய்யும். ஒருவன் வாழ்க்கையானாலும் சரி;

அவன் செய்யும் பொதுத்தொண்டு ஆனாலும் சரி; இந்த மூன்றும் மிகமிகத்தேவை என்பதை முதற்கண் உணரவேண்டும். இம் மூன்றனுள் அறிவைச் சரஸ்வதி என்றும், ஆற்றலைத் துர்க்கை என்றும், பொருளை இலக்குமி என்றும் நம்முன்னோர்கள் கண்டு போற்றினார்கள்.

வள்ளுவர் கூறுவது போல, எக்காரியத்தைக் கண்டும் அருமையானது இது; நம்மால் முடியாது; என்றெல்லாம் எண்ணித்துவளும் தோல்வி மனப்பான்மை இன்றி முழுமுயற்சி கொண்டு செய்தால் எதுவும் பயனைத்தரும் என்று உணரவேண்டும்.

> " அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும்
> பெருமை முயற்சி தரும் "

என்பது குறள்.

ஆக்கம் வழிகேட்டு வருவதற்கு நாம் இடைவிடாது ஊக்கம் உடையவர்களாகச் செயல்படவேண்டும்.

இக் "கம்பன் கழகம்" சென்ற ஆண்டைவிட ஒருபடி முன்னேறி வந்துள்ளது. இதற்குக்காரணம் கழகத்தினர் அறிவு, திரு, ஆற்றல் இம் மூன்றும் வாய்ந்தவர்களாய் - இடைவிடா முயற்சியும் செயலில் மிகுந்த ஊக்கமும் உடையவர்களாய் அமைந்து செயல்பட்டதால் தானே தவிர வேறில்லை.

**வாழும் இலக்கியம் :**

கம்பன் பாடிய காவியம் பல நோக்கிலும் சிறந்துள்ளது. ஒரு காவியம் காலம் காலமாய் பல்வேறு எதிர்ப்புக்களையும் கடந்து வெற்றி பெறவேண்டுமேயானால், அதனிடத்தில் ஓர் உயர்வு இருப்பது உண்மை. சில சினிமாப் பாடல்கள் மிகுந்த பாராட்டுதலுக்கும் போற்றுதலுக்கும் உரியதாய் இருந்து, பின் இடம் தெரியாமல் மறைந்து போவதை நம் வாழ்நாளிலேயே கண்கூடாகப் பார்க்கிறோம். காரணம் அப்பாடல்கள் எழுந்த நோக்கமும் எழுதியோரின் நோக்கமும் ஒரு குறிப்பிட்ட நோக்கில்மட்டும் இருப்பதே ஆகும்.

ஆனால் கம்பர் பாடல்கள் ஏறத்தாழ 800 ஆண்டுக் காலமாக இன்றும் நிலைத்துப் போற்றப் பெறுகின்றது என்றால் அவர்நோக்கம் பரந்ததும் பயனுடையதும் ஆக இருந்ததே காரணம். மக்கள் அனைவரும் நல்வாழ்வு வாழவேண்டும் - அதற்கு நாம் எழுதும் இந்நூல் சிறந்த அளவில் பயன் கொடுக்கவேண்டும் என்னும் பொதுநோக்கில் அவர் பாடியதால்தான் இன்றும் அப்பாடல்கள் பலராலும் பாராட்டப் பெறுகின்றன.

**நதியும் நற்றமிழ்க் கவியும் :**

கம்பர் ஓரிடத்தில் நதியையும் நற்றமிழ்க்கவியையும் ஒப்பிட்டுப் பாடுகின்றார். இராமனும் இலக்குமணனும் சீதையும் கோதாவரியைக்

கண்டார்கள் என்று கூறவரும்பொழுது சிலேடையாக ஆற்றிற்கும் ஆன்றோர் கவிதைக்கும் ஒப்புமைப்பட ஒருபாடல் பாடுகின்றார். அப் பாடலே அவரின் காவியத்திற்கு இலக்கணமாக உள்ளதை நாம் தெளியலாம்.

" புவியினுக்கு அணியாய், ஆன்றபொருள் தந்து புலத்திற்றாகி
அவி அகத் துறைகள் தாங்கி, ஐந்திணை நெறி அளாவி,
சவிஉறத் தெளிந்து, தண்ணென்று ஒழுக்கமும் தழுவிச்சான்றோர்
கவிஎனக் கிடந்த கோதாவரியினை வீரர் கண்டார் "

என்பது அப்பாடல்.

கோதாவரிஆறு இப்பூமிக்கு ஓர் அலங்காரமாயும், சிறந்த மலைபடு பொருள்களை முகந்துவந்து விளைநிலத்திற்கு ஆதரவாயும், மக்களுக்குப் பயன்படும் வகையில் இறங்கு நீர்த்துறைகள் பல உடையதாயும், குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்தல் எனும் ஐந்திணைகளின் வழி ஓடிப் பயன் விளைப்பதாயும், ஆழத்தில் உள்ள பொருள்களும் மிகத் தெளிவாகத் தெரியும்வண்ணம் தெளிந்த நீரினை உடையதாயும், குளிர்ந்த நீர்ப்பெருக்கை உடையதாயும் உள்ளது என்று அழகுறக் கூறுகிறார் கம்பர்.

இதே பாடல் வழிவழிவரும் புலவர்கள் எழுதும் கவிதைக்கும் அமைத்தது அவருடைய நுண்மாண் நுழைபுலத்திற்குச் சான்று எனலாம்.

சான்றோர் கவிதைகள் உலகத்தில் உயர்ந்தோர் பலராலும் கொண்டாடப்பெறும் அலங்காரம் உடையதாயும், சிறந்த அறம், பொருள், இன்பம், வீடு எனும் செம்பொருள் இலக்கினை விளக்குவ தாயும், தன்னைக்கற்போர்க்கு நுண்ணறிவை விளைவிப்பதாயும், துயர மனத்தை மாற்றுவிக்கின்ற அகத்துறைகள் பலவற்றையும் தாங்கிய தாயும், ஐந்திணைகளின் ஒழுக்க நெறிகளை உணர்த்துவதாயும், எச் செய்தியினையும் ஐயமற விளக்குவதாயும், நல்லொழுக்கத்தினைக் குளிர்ச்சிபெறக் கூறுவதாயும் இருத்தலால் ஆற்றினைப் போன்றன என்கின்றார்.

இந்நிலையிலிருந்து நமக்குத் தெரிவதெல்லாம் கவிதை என்பது வெறும் சொற்கோர்வையாகமட்டும் இல்லாமல், காலக் கவிதையாக வும் இல்லாமல் காலம்காலமாய் நிலைத்து நிற்கக்கூடிய நிலையில் சமுதாய உணர்வோடு படைக்கப்பெறவேண்டும் என்பதாகும்.

இவ்விலக்கணம் கம்பரின் காவியம் முழுமைக்குமே பொருந்தும் என்று கூறலாம்.

புவியினுக்கு அணி ஆருனல், நாட்டுக்கு அணி நல்லிலக்கியம் என்பதையே கம்பர் கூறுகின்ருர்.

**சொல்லின் செல்வன் அனுமன் :**

இங்ஙனம் ஆற்றல் வாய்ந்த புலவன் பாடும் காவியத்தில் கதா பாத்திரங்கள் உணர்வதும் உணர்த்துவதும் நமக்குப் பெரிதும் சிந்தனையைத் தூண்டுவதாக அமைகிறது.

கம்பர்கண்ட பாத்திரங்களில் அன்பும் ஆற்றலும் சொல்தெளிவும் தியாக உணர்வும் உடைய ஒரு பாத்திரம் அனுமன் ஆகும்.

தன் தலைவனின் மனவேதனையை உள்ளபடி புரிந்துகொண்டது மட்டுமின்றி, கடல்கடந்து சென்று சீதையைக் கண்டும் வருகிருன் அனுமன். வருபவன் சொல்லின் செல்வன் என்பதனைக் கம்பர் நமக்கு இந்த இடத்தில் படம் பிடித்துக் காட்டுகின்ருர். ஒரு பணியினைச் செய்து வருபவன் தன் காரியத்தின் விளைவு நன்மையாய் இருந்தால் அதனை முதலில் தெரிவிக்கவேண்டும். பிறகுதான் அதற்கு ஏற்பட்ட இடையூறுகளை அடுக்கிச் சொல்ல வேண்டும். காணுமல் தவிக்கும் நோயுடைய ஜீவனுக்கு உண்மையான மருந்தே, கண்டது கூறுவதுதான் எனும் நிலையில் அனுமன் மிக அருமையாகக் "கண்டனன்" என்று ஆரம்பிக்கின்ருன். 'கண்டனன் சீதையை' எனில் அவள் தூய்மையாய் இருக்கின்ருளா ? என்னும் அடுத்த கேள்வி எழும் ஆதலின் "கண்டனன் கற்பினுக்கு அணியை" என்று கூறுகின்ருன். "அதனை எங்ஙனம் நீ கண்டாய்?" என்று எழும் அடுத்த கேள்விக்குப் பதில் கூறிவிடுதல் போல, "கண்டனன் கற்பினுக்கு அணியைக் கண்களால்" என்று கூறிவிடுகின்ருன். வேறு யாரும் சொல்லிக் கேட்டு வரவில்லை; நானே என் கண்களால் பார்த்தேன் என்று கூறுகிருன். மேலும் அனுமன் பிரமசாரி ஆதலின் அனுமனுக்குச் சீதையின் களங்கமிலாத நிலை புலப்படுதல் இயற்கையே.

'கண்களால்' என்பதற்குச் 'சீதையின் கண்களால்' என்று பொருள் கூறுவதே சிறப்புடையது. என்னெனில், ஒருவன் கண்ணைக் கொண்டே அவன் திருடன், யோக்கியன் என்பதைக் கண்டுபிடிக்கலாம்; அதைப்போலவே கற்பினள் என்பதையும் கற்பிலள் என்பதையும் காணலாம். "கண்ணிற் சிறந்த உறுப்பில்லை" என்பதும் நோக்கத்தக்கது.

"பாம்பறியும் பாம்பின கால்" என்று பழமொழிநானூறு கூறுவது போல, பிரமசாரியாகிய அனுமன் தன் கண்களால் கற்புக்கனலாம் சீதாபிராட்டியின் கண்களைக் கண்டு தெளிந்தான் என்று கூறுவதே சிறப்புடைத்தாகும்.

**கவிஞனும் கதாபாத்திரமும் :**

கம்பராமாயணம் வலியுறுத்தும் கருத்துக்களில் மிகவும் இன்றியமையாதது சகோதர மனப்பான்மையை எல்லோரிடத்தும் எவ்வித வேற்றுமையின்றியும் கொள்ளல்வேண்டும் என்பதே ஆகும்.

இராமன், ஒரு வேடனையும் குரக்கினத்தான் ஒருவனையும் அரக்கன் ஒருவனையும் தம்பியாக ஏற்றுக்கொண்டு பாராட்டும் பாங்கினைப் போற்றவேண்டும். இவ்வொரு பண்பினை இராமாயணத்தின் வழி உலகெங்கும் பரப்பினாலேயே அதுவே நாம் கம்பனுக்குச் செய்யும் நற்பணியாகும்.

விபீஷணனை இராமன் தம்பியாக ஏற்றுக்கொண்டு கூறும் கருத்துடைய பாடல் மிகவும் சிந்திக்கத்தக்கது.

'' குகனொடும் ஐவர் ஆனேம் முன்பு ; பின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவர் ஆனேம் ; எம்முழை அன்பின்வந்த
அகன்அமர் காதல் ஐய ! நின்னொடும் எழுவர் ஆனேம்;
புகல்அருங் கானம்தந்து, புதல்வரால் பொலிந்தான் நுந்தை ''

இப்பாடலில் இராமனின் மனநிலையைக் கூறிய கம்பர் தன்னையும் உயர்த்திக் கொள்கின்றார், கவிஞன் உயர்வதும் கதாபாத்திரம் உயர்வதிலேயே இருக்கிறது என்பதனை உணரவேண்டும்.

**சாப்பாட்டுராமன் :**

நிறைவாக ஒரு கருத்தைச் சிந்திப்போம். நம்நாட்டில் வழங்கும் பழமொழி ஒவ்வொன்றிற்கும் ஒரு பின்னணி இருப்பதனை உணர்ந்து தெளிய வேண்டும். யாரேனும் சாப்பாட்டிற்காகப் பொழுதைக்கழித்து வருவானானால் அவனைச் ' சாப்பாட்டுராமன் ' என்று வழங்குவதைக் காண்கின்றோம். இந்தச் 'சாப்பாடு' என்னும் சொல் இராமனுடைய பெயரோடு எங்ஙனம் தொடர்புகொண்டு வழங்கிவருகிறது என்பதனைப் பார்க்கவேண்டும். இதுபோன்ற சிந்தனை இன்றையமக்களுக்கு வருவதும் சிந்தித்துத் தெளிவதும் மிகவும் முக்கியமாகும்.

இராமன் அயோத்திமாநகரைவிட்டுக் காடுநோக்கிச் செல்லும் பொழுது பாரத்வாச முனிவரின் ஆசிரமத்தில் தங்கி அவரிடம் ஆசிபெற்றுச் செல்வதாக வருகிறது. அம்முனிவரின் குடிலில் தங்கியபொழுது அவரின் விருப்பத்திற்கிணங்க இராமன் முனிவரின் உபசரிப்பினை ஏற்றுக் காடுநோக்கிச் சென்று பதினான்கு ஆண்டுகள் நிறைவுபெறும் நாளில் திரும்பும்பொழுதும் முன்னர் உணவுண்டு

ஆசிபெற்ற நன்றி மறவாது அம்முனிவரின் குடிலுக்குச் சென்று ஆசி பெற முயல்கின்றான். அப்பொழுதும் முனிவர் உணவுண்டு போக வேண்டும் என்றுவிரும்ப, அதனால் காலந்தாழ்க்குமே என்றுகருதியும் முனிவரின் விருப்பத்தினை நிறைவேற்றாமல் செல்வது பெருங்குற்றமா கும் என்று எண்ணியும் இராமன் அனுமனை அழைத்து "நீ போய் பரதன் தீயில் மூழ்காமல் காப்பாற்று; நாங்களும் பின்னே வந்துவிடு கின்றோம்" என்று கூறி அனுப்புகின்றான். பின்னர் உணவுண்டு அயோத்தி திரும்புகின்றான் என்பது இராமாயணம் கூறும் செய்தி யாகும்.

முனிவரின் விருப்பத்திற்காகவே இராமன் தங்கினாலும் சாப்பாட் டிற்காகத் தங்கினான் என்று வேடிக்கையாகக் கூறும் வழக்கம் ஏற்பட லாயிற்று. அவ்வழக்கத்திலிருந்துதான் எங்கேனும் சாப்பாட்டிற்காகத் தங்கி உள்ள மனிதனைச் 'சாப்பாட்டுராமன்' என்று கூறும்பழக்கம் உண்டாயிற்று. இதுதான் அப்பழமொழியின் பின்னணியில் மறைந்து கிடக்கும் செய்தி ஆகும்.

**பலகாரம் :**

முனிவர் பெருமான் இராமனை உபசரிக்கும்பொழுது, அக்காட்டில் கிடைக்கும் கனிகளைக் கொடுத்து உண்ணவைத்துள்ளார். நாம் மேற்கொள்ளும் விரதநாட்களில் 'பலகாரம்' உண்ணும் பொழுது பழங்களைத்தான் உண்ணவேண்டும் என்பது பெரியோர்கள் கொள்கை யாகும்.

'பழம்' எனும் சொல் 'பலம்' என்று வழங்குவதற்குக் காரணம் வடமொழியில் 'பலம்' என்றால் 'பழம்' எனும் பொருள் தருவது ஆகும். 'கதலிபலம்', 'நாளிகேரபலம்' எனும் சொல்லாட்சி வட மொழியில் பழங்களையே குறிப்பதை அறியலாம்.

விரதமிலா நாட்களில், மேலும் பிறப்பதற்குக் காரணமான விதையுடைய நெல்போன்றவற்றை உண்ணும் பாவத்திற்குப் பிராயச் சித்தம் தேடுவதுபோல, விரதநாட்களில் மீண்டும் முளைத்தற்குரிய விதைகளைத் தவிர்த்து, உண்ண இயலும் பழங்களை அதாவது மா, பலா, வாழை போன்ற கனிகளைச் சாப்பிடுங்கள் எனும் பொருளில் தான், விரதம் என்றால் பலகாரம் சாப்பிடலாம் என்று ஆன்றோர்கள் கூறினார்கள்.

ஆனால் இன்று பொங்கல், இட்லி, உப்புமா போன்ற பலவகை யான ஆகாரங்களை அந்நாட்களில் உண்டுவருகின்றோம். இது தவறு. பெரியோர்கள் உண்டாக்கியுள்ள பழக்க வழக்கங்களை நன்கு ஆய்ந்து தெளிந்து அதனைக்கடைப்பிடித்து வாழ்வதே நலம்பயக்கும் செயலாம்.

இங்ஙனம் அருமையான கருத்துக்கள் ஊற்றெனப் பெருகிவரும் இராமாயணத்தினைக் கவிஞன் கருத்தறிந்து பரப்ப இராமபத்திரன் போன்றோர் அரும்பாடுபடுகின்றனர். பாராட்டுக்குரிய இராமபத்திரன் மிகவும் ஈடுபாட்டோடும் அயரா உழைப்போடும் இப்பணியினை எவ்விதபயனும் எதிர்பாராமல் ஆற்றிவருவது மற்ற புலவர்களுக்கு எடுத்துக்காட்டாகும். இவர் தருமைத் தமிழ்க்கல்லூரியில் பயின்று பட்டம் பெற்றவர் என்பது நமக்கு மிக்க மகிழ்ச்சியைத் தருகிறது. சம்பந்தம் பிள்ளை, சீனிவாசன் ஆகியோரின் முயற்சி பாராட்டிற் குரியது.

இக்கம்பன் கழகத்தில் ஆயுள் உறுப்பினர்களாகவும் புரவலர் களாகவும் உறுப்பினர்களாகவும் இருந்து பொருளுதவி செய்வோரும் அயராது உடலுழைப்பால் பாடுபட்டுவருவோரும் எல்லா நலன்களும் பெற்று வாழச் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

வாழ்க கம்பன் புகழ்!

வளர்க கன்னித் தமிழ்!

---

# அன்னை அருள்மாலை

திருமுறைக் கலாநிதி

**வேலூர். திரு. க. சொக்கலிங்க ஓதுவார்.**

மாதவத் தோர்தொழும் தலையாலங் காடுதிரு
மடந்தைதிருக் குடவாயிலில்
மாசிலாப் பெரியநா யகியம்மை திருச்சேறை
மகிழ்ஞான வல்லியம்மை
சீதமா ருந்திரு நாலூர்ம யானமே
திகழும் பெரியநாயகி
திருக்கடு வாய்க்கரைப் புத்தூர் சிவாம்பிகை
திருஇரும் பூளை நாளும்
வேதவடி வாய்விளங் கிடும்ஏல வார்குழலி
விண்ணோர்மண் ணோர்துதித்து
வேண்டுவர மேபெறும் அரதைப் பெரும்பாழி
விரும்பலங் கார அம்மை
பாதம்நிதம் பணிவார்க் கருளிளம் பாவையே
பண்ணிலுறு பெண்ணமுதமே
பஞ்சின்மெல் லடியிணையைத் தஞ்சம் அடைந்தென்றும்
பணிவேற் கருள்அன்னையே. (20)

# திருத்தென்குரங்காடுதுறை –
# திருநீலக்குடித் தலச் சிறப்புக்கள்

தருமையாதீனத் தமிழ்ப்புலவர்,

**வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர்** எம். ஏ,

தென்குரங்காடுதுறை, திருநீலக்குடி, என்னும் இவ்விருதலங்களும் இன்றையமக்கள் வழக்கில் ஆடுதுறை எனவும், தென்னலக்குடி எனவும் வழங்கப்படுகின்றன. இவை சோழநாட்டுக் காவிரித் தென்கரைத் தலங்களில் 31, 32-வது தலங்களாகப் போற்றப்படுகின்றன. தென்குரங்காடுதுறைக்குத் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்றும் திருநாவுக்கரசர் பதிகம் ஒன்றுமாக திருப்பதிகங்கள் இரண்டும், திருநீலக்குடிக்குத் திருநாவுக்கரசர் அருளிய திருப்பதிகம் ஒன்றும் உள்ளன.

## 1. திருத்தென்குரங்காடுதுறை ( ஆடுதுறை )

இத்தலம் தஞ்சைமாவட்டத்தில் மாயூரம் கும்பகோணம் புகைவண்டிப்பாதையில் ஆடுதுறை இரயில் நிலயத்திற்கு வடக்கே ஒரு கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது. மாயூரமிருந்து கும்பகோணம் செல்லும் பேருந்துகளிலும் செல்லலாம்.

காவிரிக்கு வடகரையில் கும்பகோணத்திலிருந்து 10 கி. மீட்டர் தூரத்தில் திருவையாறு செல்லும் பேருந்துச்சாலையில் பெருமாள் கோயிலுக்கு அருகில் குரங்காடுதுறை என்ற பெயருடைய தலம் உள்ளது. அது காவிரியின் வடகரையிலிருப்பதாலும் வாலி வழிபட்டதாலும் வடகுரங்காடுதுறை என வழங்கப்படுகிறது. இது தென்கரையில் இருப்பதாலும் சுக்கிரீவன் வழிபட்ட தலமாதலாலும் தென்குரங்காடுதுறை என்று வழங்கப்படுகிறது. இந்துசமய அறநிலயத்துறையினரால் இத்தலம் பரிபாலிக்கப்படுகிறது.

**கோயிலமைப்பு** : பேருந்துச்சாலைக்குத் தெற்கே இத்தலத்தின் திருக்கோயில் உள்ளது. இக்கோயில் உத்தமசோழதேவரது தாயாராகிய செம்பியன்மாதேவியாரால் கட்டப்பெற்றகற்றளியாகும். கிழக்கு நோக்கிய சந்நிதி. அம்பிகை தெற்கு நோக்கியுள்ளார். மூன்றுநிலைகளை உடைய இராஜகோபுரத்தையடுத்து விளங்குவது வெளிப்பிராகாரம்.

விநாயகர் கொடிமரம் நந்தி பலிபீடங்களை அடுத்து, சுவாமி அம்பாள் சந்நிதிக்குப் பயன்படும்வகையில் முன்மண்டபம் உள்ளது. இத்தலத் திருப்பதிகங்கள் இங்குக் கல்வெட்டில் பதிக்கப்பெற்றுள்ளன.

இம்மண்டபத்தை அடுத்து இரண்டாம் கட்டைக்கோபுரம் உள்ளது. அதைக்கடந்து உள்ளே சென்ருல் மகாமண்டபம் உள்ளது. முதற் பிராகாரத்தில் விநாயகர், முருகன், விசுவநாதர், விசாலாட்சி, மகாலட்சுமி சந்நிதிகள் உள்ளன. வடக்குப்பிராகாரத்தில் துர்க்கை சந்நிதி உள்ளது. கருப்பக்கிருகக் கோஷ்டங்களில் உள்ள துர்க்கை, தழுவக்குழைந்தநாதர். அகத்தியர், நடராசர்திருவுருவங்கள் தரிசிக்கத் தக்கன. திருக்கோயிலை வலம்வந்து சுவாமிசந்நிதியை அடையலாம்.

அருள்மிகு ஆபத்சகாயேசுரர் என்ற திருப்பெயரோடு இறைவன் விளங்குகின்ருர். சுக்ரீவன் வாலி அனுமான் ஆகியோரால் வழி படப்பட்டபெருமான் இவர். அம்பாள் அருள்மிகுபவளக்கொடியம்மை திருக்கோயில் வெளிப்பிராகாரத்தில் தெற்கு நோக்கிய சந்நிதியோடு திகழ்கிறது.

**மூர்த்திகள் :** இறைவரது திருப்பெயர் அருள்மிகு ஆபத்சகாயர்; ஆபத்சகாயேசுவரர் எனவும் வழங்கப்படுகின்ருர். அம்பாள் திருப் பெயர் அருள்மிகு பவளக்கொடியம்மை; வண்டார்கருமென்குழல் மங்கை எனவும் வழங்கப்பெறுவார். இப்பெயரை இத்தலப்பதிகத்தின் இரண்டாம் திருப்பாட்டில் திருஞானசம்பந்தர் குறிப்பிட்டருள்கிருர்.

**சுக்ரீவன் :** திருவடகுரங்காடுதுறை வாலி வழிபட்ட தலம். அவ்வரலாறு அத்தலத் தேவாரத்திருப்பதிகத்துள்ளும் குறிக்கப்படு கிறது. இத்தலம் சுக்ரீவன் வழிபட்ட தலம் என்று கூறப்படுகிறது. தேவாரத் திருப்பதிகத்துள் இவ்வரலாறு குறிக்கப்படவில்லையாயினும் மக்கள் வழக்கிலும் தலபுராணத்திலும் இச்செய்தி கூறப்படுகிறது. வெளிப்பிராகாரத்தில் அம்பாள்கோயிலின் பின்புறம் சுக்கிரீவன் வழிபடும் காட்சி உள்ளது.

வாலியும் சுக்ரீவனும் தமையனும் தம்பியுமாவர். இராமாயணத் தில் இவர்கள் வரலாறு உள்ளது. இவ்விருவரும் சிறந்த சிவபக்தர் களாக விளங்கி இறைவன்பால் பல வரங்களைப்பெற்று அரசர்களாக நாடாட்சி செய்தனர் என்பதை இராமாயணத்தில் காணலாம்.

**கல்வெட்டுக்கள் :** 15 கல்வெட்டுக்கள் படி எடுக்கப்பட்டுள்ளன. அவற்றில் இரண்டு பாண்டியருடையது, பிற சோழர்களது எழுத் துக்கள். மாறன்சடையன் கல்வெட்டுக்கள் 6-ஆம் 8-ஆம் ஆண்டு கள் கொண்டவை. இக்கல்வெட்டுக்கள் அழிந்திருக்கின்றன. இவன்

8-ஆம் நூற்ருண்டில் (770) ஆனைமலைக் கல்வெட்டைச் செதுக்கிய சடாவர்மனுக இருக்கலாம். (வேள்விக்குடிச் சாசனம் காண்க.) சோழர் கல்வெட்டுக்களில் உத்தம சோழன் (970-86) இராசராசன் I (985-1013) குலோத்துங்கன் II, வீரராசேந்திரன், இராசராசன் II காலத்துக் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக்கல்வெட்டுக்களின்படி சில செய்திகள் கிடைக்கின்றன கண்டராதித்தியர் தேவியார் செம்பியன்மாதேவியார் இக்கோயிலைக் கற்றளியாக்கினுர். (986) பிறகு கோயிலுக்கு (994) இல் 8 மா. நிலம் தந்தார். முதல் குலோத்துங்கன் நாளில் விளக்குக்காகத் தானம் செய்யப்பட்டது. சுங்கம் தவிர்த்த சோழப் பேராறு என்று அரசன் பெயரில் ஓர் ஆற்றுக்குப் பேர் இடப்பட்டது.

**நாடு :** பூபாலகுலவல்லி வளநாடு, திரைமூர்நாடு திருக்குரங் காடுதுறை என்ற பெயர்கள் இருக்கின்றன.

இத்திருக்கோயிலில் சோழமன்னர்களில் பரகேசரிவர்மனுகிய உத்தமசோழர், ராஜராஜகேசரிவர்மர், திரிபுவனசக்கிரவர்த்திகுலோத் துங்க சோழதேவர், திரிபுவன சக்கிரவர்த்தி இராஜராஜதேவர், திரிபுவன சக்கிரவர்த்தி வீரராஜேந்திரதேவர் இவர்கள் காலங்களில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்களும், பாண்டியன் மாறன் சடையன் காலத்துக் கல்வெட்டும் இருக்கின்றன.

இத்திருக்கோயிலைக் கற்றளியாகக்கட்டியவர், உத்தமசோழ தேவரைத் திருவயிறு வாய்த்த, உடைய பிராட்டியார் பராந்தகன் மாதேவடிகளாரான செம்பியன் மாதேவியார் ஆவர். இறைவர் திருக்குரங்காடுதுறை மாதேவர் என்னும் பெயரால் அழைக்கப்பட் டுள்ளனர். இவ்வூர், முதலாம் இராசராசன் காலத்தில் தென்கரைத் திரைமூர்நாட்டுத் திருக்குரங்காடுதுறை என்றும், திரிபுவன சக்கிர வர்த்தி குலோத்துங்கசோழதேவன் காலத்தில் பூபாலகுலவல்லி வளநாட்டு, திரைமூர்நாட்டுத் திருக்குரங்காடுதுறை என்றும் கூறப் பெற்றுள்ளது. இக்கல்வெட்டுக்களில் சுங்கந்தவிர்த்த சோழப்பேராறு குறிக்கப்பெற்றுள்ளது. இவ்வூர்க்கு அண்மையிலுள்ள மருத்துவக்குடி என்னும் ஊரின் பெயரும் காணப்படுகிறது. இம்மருத்துவக்குடியே திருஇடைக்குளம் என்னும் வைப்புத்தலமாகும். இச்செய்தி அம் மருத்துவக்குடி கோயிலில் செதுக்கப்பெற்றுள்ள திரிபுவனசக்கிரவர்த்தி கோனேரின்மை கொண்டானின் 21-ஆம் ஆண்டுக் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது.

## 2, திருநீலக்குடி

இத்தலம் தஞ்சைமாவட்டம் மாயூரம் கும்பகோணம் புகை வண்டிப் பாதையில் ஆடுதுறை இரயில்நிலயத்திற்குத் தெற்கே ஐந்து

கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிறது. கும்பகோணம் – காரைக்கால், அணைக்கரை – வடமட்டம், ஆடுதுறை – திருவாரூர் பேருந்துகளில் சென்றால் இத்தலத்தை எளிதில் அடையலாம்.

**பெயர்க்காரணம் :** தேவர்கள் திருப்பாற்கடலில் அமுதம் கடைந்த காலத்தில் தோன்றிய நஞ்சை உண்டு நீலகண்டனான இறைவன் எழுந்தருளி விளங்குவது ஆதலின் இத்திருத்தலம் திருநீலக்குடி எனப்பெற்றது. இதனைத் திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய,

நாலு வேதியர்க்கு இன்னருள் நன்னிழல்
ஆலன் ஆலநஞ்சு உண்டகண்டத்து அமர்
நீலன் நீலக் குடியுறை நின்மலன்
கால னாருயிர் போக்கிய காலனே.

என்னும் இத்தலத் தேவாரத் திருப்பாடலிற் காணலாம்.

இன்று இத்தலம் தென்னலக்குடி என வழங்கப்படுகிறது. பஞ்ச வில்வாரண்யக்ஷேத்திரம் எனத் தலபுராணத்தில் இவ்வூர் குறிப்பிடப்படுகிறது. இத்தலம் திருவாவடுதுறை ஆதீனத்துக்குச் சொந்தமானது. சுவாமிக்கு அபிஷேகம் செய்யப்பெறும் நல்லெண்ணெய் முழுதும் இலிங்கத்தில்சுவறும் அற்புதத்தை இத்தலத்திற் காணலாம்.

திருநாவுக்கரசு சுவாமிகளைச் சமணர்கள் கல்லோடு பிணைத்துக் கடலில் இட்டபோது அவர் இத்தலத்து இறைவன் திருப்பெயரை ஓதிக் கரையேறினார் என அவர் அருளிய தேவாரம் குறிப்பிடுவதைக் காணலாம்.

கல்லி னோடுஎனைப் பூட்டி அமண்கையர்
ஒல்லை நீர்புக நூக்கஎன் வாக்கினால்
நெல்லு நீள்வயல் நீலக்குடி அரன்
நல்ல நாமம் நவிற்றிஉய்ந் தேனன்றே.

என்பது அப்பர் அருளிய இத்தலத் தேவாரம்.

**திருக்கோயிலமைப்பு ;** "நெல்லுநீள்வயல் நீலக்குடி" என்பதற்கேற்றவாறு இத்தலம் நாற்புறங்களும் வயல்களால்சூழப்பெற்றுத் திகழ்கிறது. அப்பர் சுவாமிகள் திருவாக்கின் சிறப்பால் தென்னாட்டில் புகழ்பெற்ற ஆடுதுறை நெல்லாராய்ச்சித்துறை நிறுவனங்கள் இங்குள்ளன. கோயில் கிழக்குநோக்கி உள்ளது. கோயிலுக்கு எதிரே தேவி தீர்த்தம் உள்ளது.

கோபுரவாயிலைக்கடந்து உள்ளே சென்றதும் வெளிப்பிராகாரம் வருகிறது. கொடிமரம் நந்தி பலிபீடங்கள் உள்ளன. இரண்டாம் கோபுரவாயிலைக்கடந்து உள்ளே சென்றால் முதற்பிராகாரத்தை அடையலாம். பிரமன் வழிபட்ட பிரமலிங்கம் முன்மண்டபத்தில் தனியே உள்ளது. உட்பிராகாரத்தில் விநாயகர், முருகன், தக்ஷிணு மூர்த்தி, காசிவிசுவநாதர், மகாலட்சுமி சந்நிதிகள் உள்ளன. வடக்குப் பிராகாரத்தில் தெய்விகப் பலாமரம் உள்ளது. இம்மரத்தின் பழங்களைச் சுவாமிக்கு நிவேதனம் செய்தபிறகு சாப்பிட்டாலே இனிமை உடையதாயிருக்கும். அவ்வாறின்றி எடுத்துச்சென்று உண்டால் சுவையிராது என்று கூறப்படுகிறது.

சுவாமிசந்நிதி அர்த்தமண்டபம் மகாமண்டபங்களோடுசிறப்பாக விளங்குகிறது. இறைவன் அருள்மிகு நீலகண்டேசுரர். வெளிப் பிராகாரத்தில் சுவாமிக்கு இடதுபாகத்தில் இரண்டு அம்பாள் சந்நிதி கள் உள்ளன. அம்பிகையரின் திருப்பெயர்கள் அருள்மிகு அநூப மஸ்தனி (ஒப்பிலாமுலையம்மை). அருள்மிகு பக்தாபீஷ்டதாயனி. (அன்பர்கள் விரும்பும் நலங்களை அருள்பவள்) என்பனவாகும். இத்தலப் பெருமான் மார்க்கண்டேயர்க்கு அருள்புரிந்தவர் ஆதலின் மார்க்கண்டேயர் விக்கிரகம் உள்ளது. திருவிழாக் காலங்களில் சுவா மிக்கு முன்னால் எதிர்முகமாக மார்க்கண்டேயர் செல்கிறார்.

**மூர்த்திகள்** ; சுவாமிதிருப்பெயர்: அருள்மிகு நீலகண்டேசுரர். வடமொழியில் மனோக்ஞநாதர் என வழங்கப்படுகிறார். வில்வா ரண்யேசுரர், பிரமநாயகர், தைலாப்பியங்கேசர், காமதேனுபுராதீசர் முதலிய பெயர்களும் உள்ளன. அம்பாள் திருப்பெயர் அநூபமஸ்தனி. பக்தாபீஷ்டதாயனி, தைலம்தேய்க்கும் க்ன்னிகை என்பனவாகும். தீர்த்தங்கள் பிரமதீர்த்தம் என்ற கிணறு, தேவிதீர்த்தம், பாரத்வாஜ தீர்த்தம், மார்க்கண்டேயதீர்த்தம், க்ஷீரகுண்டம் என்பனவாகும். தலமரம் பஞ்சவில்வம்.

**தலப்பெருமை :** பிரமன் வருணன் ரோமசமுனிவர் தேவ கன்னிகைகள் பூசித்த தலம். சூரபதுமனுக்குப் பயந்து பிரமன் இந்திரன் காமதேனு ஆகியோர் கைலாயம் சென்றிருந்தனர். யாகம் செய்ய நினைத்த வசிட்டர் காமதேனு தன் யாகத்திற்கு உதவாததால் அதனைச் சபித்தார். கைலை சென்ற காமதேனுவைச் சபித்ததால் வசிட்டர் தவமிழந்தார். நாரதர் அறிவுரைப்படி வசிட்டர் காமதேனு ஆகியோர் பஞ்சவில்வவனம் என்னும் இத்தலத்தை அடைந்து இறைவனை வழிபட்டு நலம் பெற்றனர்.

கைலாயத்தில் முத்திமண்டபத்தில் ஊர்வசியைப்பார்த்துப் பிரமன் மயங்கினான். பெருமான் பிரமனை அவ்விடத்திலிருந்து

அகற்றினர். படைப்புத் தொழிலை இழந்த பிரமன் பஞ்சவில்வாரண்யம் வந்து இறைவனை வழிபட்டு, இறைவன் திருவருள்பெற்று, மீண்டும் பிரமலோகம் சென்று படைப்புத்தொழிலை மேற்கொண்டான்.

மிருகண்டு முனிவர் குறைந்த வாழ்நாளை உடைய தன்மகன் சிரஞ்சீவியாக விளங்குதற்கு வசிட்டமுனிவரிடம் வழிகேட்டார். வசிட்டரும், நாரதரும் ' நீலக்குடிசென்று இறைவனை வழிபட்டால் இறவாவரம்பெறலாம் ' என்றனர். மார்க்கண்டேயர் இத்தலத்திற்கு வந்து நீலகண்டேசுரருக்குத் தைலாபிஷேகம்செய்து சப்தஸ்தான விழா நடத்திச் சிரஞ்சீவித்தன்மை எய்தினர்.

உமையம்மை தக்கன் மகளாகப்பிறந்து தாக்ஷாயணி என்ற திருப்பெயரோடு இறைவனை மணந்தார். தக்கன் சிவபெருமானைப் புறக்கணித்துச் செய்த யாகத்திற்குத் தாக்ஷாயணி தந்தையின்மீதுள்ள அன்பால் தான் போகவேண்டும் என்று விரும்பினள், இறைவன் தடுத்தார். சிவபெருமானது வார்த்தையைக்கேளாது தக்கயாகத்திற்குத் சென்ருள் அம்பிகை. அழையாமல்வந்த அம்மையைத் தக்கன் அவமரியாதைசெய்தான். தாக்ஷாயணி தக்கன் மகளாகப் பிறந்த தன்னுடலைக் களைந்து இறைவனருளால் இமவான்மகளாகப் பிறந்து இறைவனை அடையத் தவம்செய்தாள். இறைவன் வில்வாரண்யம் எனப்படும் திருநீலக்குடியில் ஆயிரம் ஆண்டுகள் தவமிருக்கும்படி அருளினர்.

இறைவன் அம்பிகைக்குத் தைலாபிஷேக விதியைக் கூறித் தும்மைத் தைலம் ஆட்டி வழிபடுமாறு பணித்தார். அம்பிகை அபிடேகிக்கும் அத்தைலத்தை எக்காலத்தும் ஏற்றுக்கொள்வதாகவும், யுகபேதங்களிலும் இலிங்கத்தில் அபிடேகிக்கும் எண்ணெய் சுவறும் என்றும், உலகிற்கு ஏதேனும் அரிஷ்டம்வருமானல் எண்ணெய் சுவருது என்றும் கூறியருளினர். இறைவன் அருளியவாறே அம்பிகை இங்குவந்து இறைவனுக்கு அபிடேக ஆராதனைகள் செய்து வழிபட்டு, பெருமானை மணந்து அவரது இடப்பாகத்தைப்பெற்ருள்.

**எண்ணெய் சுவறும் அதிசயம்:** அம்பிகைக்கு அன்று இறைவன் கொடுத்த வரத்தின்படி பன்னெடுங்காலமாகச் சிவலிங்கபாணத்தில் எண்ணெய் சுவறிவருகிறது. சுவாமிக்கு அபிடேகம் செய்தற்குரிய எள்ளைச்சுத்தம்செய்து கோயிலிலுள்ள கல்செக்கில் ஆட்டி அபிடேகம் செய்யப்பெறுவது வழக்கம். கல்செக்கு கோயில் வாயிலில் இன்றும் இருக்கிறது.

கோடைகாலத்தில் சித்திரை மாதத்தில் 12 சேரும், மாசிமாதத்தில் 6 சேரும், கார்த்திகைமாதத்தில் 8 சேரும் எண்ணெய் அபிடேகம் செய்யவேண்டுமென்று தலமகாத்மியம் கூறுகிறது

அபிடேகம் செய்யப்பெறும் எண்ணெய் மற்றும் பொருள்களை அம்பிகைசந்நிதியில் வைத்து முறைப்படி எடுத்துச்சென்று சுவாமிக்கு அபிடேகம் செய்விக்கின்றனர். கோமுகையை அடைத்துவிட்டு சுவாமியின் சிரசில் எண்ணெய்விட்டுக் கைகளால் மெல்லத்தேய்க்கின்றனர். இரண்டுமணிநேரத்தில் எண்ணெய் சுவறுகிறது. அபிடேகம் செய்தபின் எண்ணெய்ப்பசை இல்லை.

**கல்வெட்டு :** கோயிலுக்குள் நெற்கூடு கட்டுதல் கூடாது என்பதை ஒரு கல்வெட்டும், மற்றொரு கல்வெட்டு அவ்வூரிலுள்ள மத்தியார்ச்சுனம் என்னும் திருக்குளத்தைப்பற்றியும்தெரிவிக்கின்றது. மேலும் பிந்திய கல்வெட்டு சப்தஸ்தானங்களுக்குரிய ஊர்களின் பெயர்களையும் குறிக்கின்றது.

## அடைவுத் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

கயிலாய மலையெடுத்தான் கரங்க ளோடு
சிரங்களுரம் நெரியக்கால் விரலாற் செற்றோன்
பயில்வாய பராய்த்துறைத்தென் பாலைத் துறை
பண்டெழுவர் தவத்துறைவெண் டுறைபைம்பொழிற்
குயிலாலந் துறைசோற்றுத் துறைபூந் துறை
பெருந்துறையுங் குரங்காடு துறையி னோடு
மயிலாடு துறைகடம்பந் துறை ஆவடு
துறைமற்றுந் துறையனைத்தும் வணங்குவோமே.

## பெரியபுராணம்

மருங்குளநற் பதிகள்பல பணிந்துமா நதிக்கரைபோய்க்
குரங்காடு துறையணைந்து குழகனார் குரைகழல்கள்
பெருங்காத லிற்பணிந்து பேணியஇன் னிசைபெருக
அருங்கலைநூல் திருப்பதிகம் அருள்செய்து பரவினார்.

— சம்பந்தர் புராணம்.

திருச்சிற்றம்பலம்.

# அமெரிக்காவில் சைவசித்தாந்தம்

கீழை நாட்டுப் பேரொளியாகத் திகழ்ந்த விவேகானந்தர் அமெரிக்காவில் நடைபெற்ற உலகச் சமயங்களின் மாநாட்டில் கலந்து கொண்டு வேதாந்தத்தின் பெருமையை உலகுக்கெடுத்து உணர்த்திய பின், இந்தியாவிற்கு மீண்டும் வரும்போது சென்னைமாநகரில் மாபெரும் வரவேற்பு அளிக்கப்பெற்றது. அவ்வரவேற்புக்கு ஏற்பாடு செய்த பாசுகர சேதுபதி அவர்கள் விவேகானந்தருக்கு மறைத்திரு மறைமலையடிகளாரின் சமய ஆசிரியரான 'சைவசித்தாந்த சண்டமாருதம்' சோமசுந்தர நாயகரை அறிமுகப்படுத்திவைத்தாராம். நாயகர் சைவ சித்தாந்தத்தின் அருமை பெருமைகளை விவேகானந்தருக்கு எடுத்துக் கூறினர். அவற்றைக்கேட்ட விவேகானந்தர் 'அமெரிக்காவிற்குச் செல்லுமுன் எனக்கு இவை தெரியாமல்போயிற்றே. தெரிந்திருப்பின் சைவசித்தாந்தத்தின் சிறப்பை அங்குப் பரப்பிவிட்டுவந்திருப்பேனே' என்று குறிப்பிட்டதாகக் கூறுவர்.

விவேகானந்தருக்குக் கிட்டாத பேறு இன்று அமெரிக்கநாட்டினரான தவத்திரு. 'மாஸ்டர் சுப்பிரமுனியர்' (Master Subramuniya) என அழைக்கப்பெறும் குரு சுப்பிரமணியருக்குக் கிடைத்துள்ளது. சைவசித்தாந்தத்தின் சிறப்பை உலகுணரச் செய்யவேண்டுமென்பதற்காகச் 'சைவசித்தாந்தத் திருமடத்தை'க் (Saiva Siddhantha church) குரு சுப்பிரமணியர் 1957 இல் நிறுவினர்.

கலிபோர்னியாவில் 1927 இல் பிறந்த இவர் நாட்டியக்கலையில் ஆர்வம்கொண்டு பல நாடுகளையும் சுற்றிவந்தார். 1947 இல் கலை ஆர்வத்துடன் இலங்கைக்குவந்த குருவிற்கு அருள் ஞானி யோகா ஸ்வாமியின் அருள் கிடைத்தது அவரே குருவைத் தடுத்தாட்கொண்டு ஆன்ம ஞானத்தில் அவரை ஈடுபடச்செய்து சைவசித்தாந்தத்தைப் பரப்பும் பணியை அவரிடம் ஒப்படைத்தார்.

தம் ஞானசிரியரின் ஆணையை ஏற்றுக்கொண்ட குரு அவாய்த் (Hawaii) தீவுகளில் ஒன்றான கௌவை (Kauai) என்ற தீவில் வயலுவா (Wailua) ஆற்றங்கரையில் சைவசித்தாந்தத்திருமடத்தை 45 ஏக்கர் பரப்பளவுள்ள தனிமை சூழ்ந்த இடத்தில் நிறுவியுள்ளார், அவாய்த் தீவுகளின் தலைநகரான ஒனலுலு (Honolulu) விலிருந்து 102 கல் தொலைவில் இஃது அமைந்துள்ளது. இதன் சார்பில் சைவ சித்தாந்தத்தை முறையாகப் பயிற்றுவிக்க வயலுவா ஆழ்நிலைத் தியானக் கலைகளின் பல்கலைக் கழகம் (Wailua University of

Contemplative Arts and Himalayan Academy) நிறுவப்பெற்றுள்ளது. இத்திருமடத்தின் உறுப்பினர்கள் வழிபடுவதற்காக, வயலுவா ஆற்றங்கரையில் அவிந்துபோன எரிமலையொன்றின் அடிவாரத்தில் சிவன்கோயில் ஒன்றும் நிறுவப்பெற்றுள்ளது.

இத்திருமடத்தின் கிளைகள் நான்கு சான்பிராசிஸ்கோ, நெவாடா, நியூயார்க், இலங்கை ஆகிய இடங்களில் உள்ளன. இவற்றில் பல அமெரிக்கர்கள் சேர்ந்து பணியாற்றிவருகின்றனர்.

குரு சுப்பிரமணியர் சைவ சமயக் கருத்துக்களை எளியநடையில் மக்களுக்குச் சொற்பொழிவுகள்மூலம் விளக்கிவருகிறார். சைவ சமய சாத்திரங்களையும் குறிப்பாகத் திருமந்திரத்தையும் உலக முழுவதும் பரப்பவேண்டும் என்று குரு பாடுபட்டுவருகிறார். திருக்குறளையும் உலகறியச் செய்யவேண்டுமென்ற நோக்கம் குருவிற்கு உண்டு. அவருடைய சொற்பொழிவுகள் பெரும்பாலும் நூல்வடிவிலும் நாடாப் பதிவு செய்யப்பெற்றும் கிடைக்கின்றன. மேற்கூறிய பல்கலைக்கழகத்தில் பயிலும் மாணவர்களுக்கு இவை பாடமாகக் கற்பிக்கப்பெறுகின்றன. அமெரிக்கநாட்டின் பல்வேறு பகுதிகளிலுமிருந்து குரு மாணவர்களைத் தேர்ந்தெடுக்கிறார்.

இவரிடம் பயின்ற மாணவர்கள் சைவசமயக் கருத்துக்களைப் பரப்புவதிலும் அமெரிக்காவில் அங்கங்குத் தோன்றிவரும் கோயில்களைப் பேணுவதிலும் ஈடுபட்டுவருகின்றனர். அவாய்த்தீவிலுள்ள சிவன்கோயில் இயற்கையாக அமையப்பெற்ற லிங்கத்தைச் சுற்றி எழுப்பப்பெற்றது. அதற்குச் 'சன்மார்க்கத் திருக்கோயில்' என்ற பெயரைக் குரு சூட்டியுள்ளார். சான்பிராசிஸ்கோவில், பிள்ளையார் கோயில் கட்டப்பெற்றுள்ளது. நெவாடாவிலுள்ள குன்றின்மீது சுப்பிரமணியர் கோயில் அமைக்கப்பெற்று அம் மலைக்கே 'கந்தமலை' என்ற பெயரும் சூட்டப்பெற்றுள்ளது. அங்கு இத்திருமடத்தின் வெளியீடுகள் அனைத்தையும் வெளியிடுவதற்காகச் சொந்தத்தில் ஓர் அச்சுக்கூடமும் நிறுவப்பெற்றுள்ளது. சான்பிராசிஸ்கோவிலும் 'சித்தாந்தா அச்சகம்' என்ற பெயரில் ஓர் அச்சுக்கூடம் இம் மடத்தைச் சார்ந்துள்ளது.

நியூயார்க் நகரில் ஃபிளசிங் (Flushing) பகுதியில் இந்துக் கோயில்ஒன்று அண்மையில் அமைக்கப்பெற்றது. அதில் பிள்ளையார், முருகர், சிவபெருமான், உமை, திருமால், திருமகள் ஆகிய திருமூர்த்தங்கள் உள்ளன. இக் கோயிலுக்கருகில் குரு சுப்பிரமணியரின் "சைவ சித்தாந்தத் திருமடத்தின்" கிளை ஒன்று தொடங்கப் பெற்றுள்ளது.

செட்டிநாட்டைச் சார்ந்த டாக்டர். ஏ. அழகப்பன் அவர்கள் அங்குவாழும் சைவப்பெருமக்களுடன் இணைந்து ஊஸ்டன் (Houstan) நகரிலும், லாஸ் ஏஞ்சல் சிலும் (Los Angeles) கோயில்கள் எழுப்பத் தடங்கல்கள் ஏற்படுகின்றனவே என்று வருந்திக் குரு சுப்பிரமணிய ரிடம் அறிவுரை கேட்க அதற்கு "அந்த இடங்களில் பிள்ளையார் சிலைகளை வையுங்கள். இடர்கள் நீங்கும்" என்று கூறினராம். அவ்வாறு செய்ய இடர்கள் நீங்கப்பெற்று இப்போது கோயில்கள் உருவாகி வருகின்றன.

அவ்வாறே பிட்ஸ்பர்க் நகரில் (Pittsburg) திருமாலின் நின்ற கோலத்தை அமைத்தபின் லாஸ் ஏஞ்சல்சில் கிடந்தகோலத்தை அமைக்க எண்ணியபோது சிலர் நின்றகோலம்தான் பொருத்தம் என்று கூறினர். இதுபற்றிக் குரு சுப்பிரமணியரின் அறிவுரை கேட்டபோது "இரண்டுமே உரிய கோலங்களே" என்று கூறி, கிடந்த கோலத்தை அமைக்க ஆணையிட்டுள்ளார். அவ்வாறே கோயிலும் உருவாகிவருகிறது.

இவ்வாறு திருக்கோயில்களை அமைப்பதிலும் சைவசமயக் கருத்துக்களைச் சொற்பொழிவாற்றுவதிலும் பெரிதும் ஈடுபட்டுள்ள குரு சுப்பிரமணியம் அவர்கள் திருக்குறளையும் திருமந்திரத்தையும் ஆங்கிலத்தின் வழியாக உலக முழுவதற்கும் பரப்பவேண்டுமென்று அதில் ஈடுபட்டுவருகிறார். திருக்குறளை ஆங்கில உரைநடையில் மொழிபெயர்த்து வெளியிடத் திட்டமிட்டுள்ளார். அவ்வாறே திரு மந்திரத்தின் ஆங்கில மொழிபெயர்ப்பை வெளிக்கொணர்வதிலும் நாட்டஞ்செலுத்திவருகிறார்.

பொருளியல் அறிஞரும் சித்தாந்தச் செல்வருமான டாக்டர். பா. நடராசன் அவர்கள் திருமந்திரத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பதில் பல்லாண்டுகளாக ஈடுபட்டுள்ளார். அவர் தம் மொழி பெயர்ப்புக்கள் "குமரகுருபரன்", "Saiva Siddhantha" இதழ்களில் சிற்சில பகுதிகள் அவ்வப்போது வெளிவந்துள்ளன. இவற்றைக் கண்ட குரு சுப்பிரமணியர் சென்ற ஆண்டு சென்னைக்குவந்திருந்த போது டாக்டர் நடராசன் அவர்களுடன் கலந்துபேசித் திருமந்திரம் முழுவதையும் மிக அழகிய முறையில் ஆங்கிலத்தில் 12 தொகுதி களாக வெளியிடத் திட்டமிட்டனர். அம்முறையில் முதல்தொகுதி அச்சிட்டு முடியப் பெற்றுள்ளது. எஞ்சிய தொகுதிகளும் ஒன்றிரண்டு ஆண்டுகளுக்குள் முடிந்துவிடும். இப் பெரும்பணியில் ஈடுபட்டுள்ள குரு சுப்பிரமணியருக்குத் தமிழுலகம், குறிப்பாகச் சைவப்பெருமக்கள் நன்றிகூறுங் கடப்பாடுடையர்.

திருக்குறளிலும் திருமந்திரத்திலும் தம் மனத்தைப் பறிகொடுத்த குரு சுப்பிரமணியர் திருவள்ளுவருக்கும் திருமூலருக்கும் மிகப் பெரிய திருவுருவச்சிலைகளைச் சென்னையையடுத்த மாமல்லபுரம் சிற்பக்கூடத்தில் உருவாக்கி, அவை இரண்டையும் சைவ சித்தாந்தத் திருமடத்தின் தலைமைப்பீடம் அமைந்துள்ள வயலுவா ஆற்றங்கரையில் அமைத்துள்ளார். திருவள்ளுவர் சிலை முழங்காலிட்டு அமர்ந்த நிலையில் ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டு எழுதுகின்ற பாங்கில் அமைந்துள்ளது. திருமூலர் திருஉருவம் தவநிலையில் அமர்ந்த கோலத்தில் உள்ளது. இனி சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்க வாசகர் ஆகிய நால்வர்க்கும் திருவுருவுச் சிலைகள் அமைக்கப்பெறும், இத் திருவுருவச் சிலைகளைச் சுற்றிச் சிறுகோயில்கள் எழுப்பப்பெறும். கோயில்களுக்கு முன்பு தியான மண்டபங்கள் அமைக்கப்பெறும். மொத்தத்தில் கௌவைத்தீவு முழுவதுமே சைவசித்தாந்த சமயத்தின் மேலைநாட்டுத் தலைமைப்பீடமாக உருவாகும் சூழல் ஏற்பட்டுள்ளது. அங்கிருந்து சைவ சமயம் மேனாட்டுத் தொண்டர்கள் வழியாக மேலைநாடுகளில் பரப்பப்பெறும். தமிழ்நாட்டுத் திருமடங்கள் செய்ய வேண்டிய ஒரு பெரும் பணியை மேலைநாட்டில் பிறந்த ஒருவர் தனித்து நின்று செய்வதைப் பார்க்கும்போது வியப்பாகவும் மலைப்பாகவும் உள்ளது.

குரு சுப்பிரமணியர் தாம் பயிற்றுவிக்கும் தொண்டர்கட்கு நல்ல சைவப் பெயர்களையும் சூட்டுகின்றார். அதையும் முறையாகப் பெயர் சூட்டு விழாவாக அமைத்துச் செய்கின்றார். திருமடத்தைச் சார்ந்த சிவன் கோயிலில் விநாயகப் பொருமான்முன் வழிபாடு தொடங்கி முறையே முருகப்பெருமானுக்கும் சிவபெருமானுக்கும் வழிபாடுகள் செய்து, தேங்காயும் உடைத்து, பூ, பழங்களுடன் நடராசர் திருவுருவத்தின்முன்வைத்து, மக்கள் பெயர்மாற்றவிழா நடைபெறுகின்றது.

இவ்வாண்டுத் தொடக்கத்தில் 41 அடியார்களுக்குச் சைவப் பெயர் சூட்டப்பெற்றது. கீழே சூட்டப்பெற்ற சைவப் பெயரும் அன்னார்தம் இயற்பெயரும் காட்டாகச் சில தரப்பெற்றுள்ளன.

| சைவப்பெயர் | இயற்பெயர் |
|---|---|
| திருநாதன் முருகன் | Carl James Williams |
| சோமசுந்தரம் | Christian Orta |
| ஆனந்த குமார் | Lislie Wilkenson |
| மணி நல்லூரன் | Richard Simmonds |
| சிவகுமார் நல்லூரன் | Kathy Simmonds |
| முருக நல்லூரன் | Joshua Simmonds |

இவ்வாறு பெயர்மாற்றம் செய்யப்பெற்றவுடன் அதற்குரிய சான்றிதழ்களும் வழங்கப்பெறுகின்றன. அவர்கள் சைவர்களாக ஏற்றுக்கொள்ளப்பெறுகிறுர்கள். உலகின் மறுமுனையில் இருந்து கொண்டு சிவத்தொண்டு ஆற்றிவரும் தவத்திரு. குரு சுப்பிரமணிய சுவாமிகளின் பெருமையை என்னென்று எடுத்தியம்புவது !

குரு சுப்பிரமணியரின் 52ஆவது பிறந்தநாள் விழா இவ்வாண்டு சனவரி 5ஆம் நாள் கௌவைத் தீவில் கொண்டாடப்பெற்றது. இப் புத்நாண்டுப் பணியாக அவர் சைவசமயத்தை எளிய முறையில் மேலைநாட்டினர்க்கு விளங்கவைக்க "The New Saivite World" என்ற ஆங்கில இதழை வெளியிடத் தொடங்கியுள்ளார். முதல் இதழ் பிப்பிரவரித் திங்களில் வெளிவந்தது. இதில் திருமடத்தின் தொண்டுகளும் வயலுவா பல்கலைக் கழகத்தின் பணிகளும் சைவ நாயன்மார்களின் கதைகளும் பிற சைவசமயக் கருத்துக்களும் இடம் பெறும். இதே நோக்கத்துடன் இம்மடத்தின் இலங்கைக் கிளையைச் சேர்ந்த டாக்டர். எஸ். சண்முகசுந்தரம் "SIVANERI" என்ற ஆங்கில இதழைத் தொடங்கி அதன் முதல் இதழைக் குரு சுப்பிர மணியம் அவர்களின் பிறந்தநாள் விழாவில் வெளியிட்டார். இவ்விரு இதழ்களும் இணைந்து சைவசமயத்தைப் பரப்பப் பாடுபடும்.

இத்தகைய பெரும் பணியில் ஈடுபட்டுள்ள குரு சுப்பிரமணியம் அவர்களுக்குப் போதிய பொருளுதவி மேலை நாட்டினரிடமிருந்தே கிடைக்கிறது. தமிழகத்துத் தமிழர்களைமட்டுமன்றி மேலை நாடு களில் வாழ்ந்துவரும் தமிழர்களைக்கூட இவர் பொருளுதவிக்காக நாடாதது பெருவியப்பேயாகும். அமெரிக்கப்பெருமக்களிடமிருந்தே இருபதுலட்ச ரூபாய்க்குமேல் பொருள் திரட்டிப் பல நல்ல பணி களில் செலவிட்டுவருகிறுர். அலைகடலுக்கு அப்பால் அமெரிக்க நாட்டில் அமைதியான முறையில் "அன்பே சிவம்" எனும் சிவ நெறியின் பெருமையை உலகுக்கெடுத்து ஓதிவரும் தவத்திரு. குரு சுப்பிரமணிய சுவாமிகள் எனும் மாஸ்டர் சுப்பிரமுனியா அவர்களின் சிவத்தொண்டு பெருகி வளர்ந்து சைவ சமயத்தின் பெருமையை நிலைநாட்டுவதாக.

"காலத்தையும் இடத்தையும் கடந்த பரசிவமான சிவனே முழு முதற் கடவுள் என்பதை நான் நம்புகிறேன்."

"நான் சைவ மந்திரமான "நமசிவாய" என்னும் ஐந்தெழுத்து (பஞ்சாட்சர) மந்திரத்தை நம்புகிறேன்."

இவ்வாறு ஒவ்வொருசைவனும் சிலவற்றை உறுதியாகக்கொண்டு வாழ்க்கையில் கடைப்பிடித்தொழுகவேண்டும் என்று குரு சுப்பிர மணியர் வலியுறுத்துகிறுர்.

நன்றி. — செந்தமிழ்ச்செல்வி, மார்ச்சு 1979.

# அறம் கூறும் அரிய நூல்கள்

பேராசிரியர் திரு. மு. சிவச்சந்திரன் எம். ஏ.

( மலர் 38, இதழ் 4, பக்கம் 179 இன் தொடர்ச்சி )

**ஒருபொருள் பற்றிய மூன்று :**

இந்நூலாசிரியர் ஒரு பாடலில் ஒருமனிதன் தன் வாழ்வில் படிப் படியாகக் கடைப்பிடிக்க வேண்டிய வழிமுறைகள் என்ன என்ன என்று கூறுகின்றார்.

இளமையில் கல்வி கற்றும், அடுத்துப் பெற்றோர்களை வழிபட்டும், அவர்கள் போற்றி வந்த ஒழுக்க நெறிமுறைகளைத் தன் வாழ்கையிலும் கடைப்பிடித்தும் வாழ்வதே உயரிய வாழ்வாகும் என்று கூறுகின்றார். அப்பாடல்:

" முந்தை எழுத்தின் வரவுணர்ந்து பிற்பாடு
தந்தையும் தாயும் வழிபட்டு — வந்த
ஒழுக்கம் பெருநெறி சேர்தல்இம் மூன்றும்
விழுப்ப நெறிதூரா வாறு. " [ பா. எ. 56 ]

மற்றுமொரு பாடலில் ஒருபெண் தன் கணவனுக்குச் செயல்வழி எங்ஙனம் பல்வேறு தகுதி பெறுகிறாள் என்று விளக்கிக் கூறுகின்றார்.

தன் இல்லத்திற்குவரும் விருந்தினரைப் பாதுகாத்தலால் கணவனுக்கு நட்பினளாயும், நாடோறும் இல்லறத்தை வழுவாது காத்தலால் பெற்ற தாயாயும், குடும்ப பாரம்பரியத்தைக் காப்பாற்ற மக்களைப் பெற்றுத் தருதலால் நல்மனையாளாயும் வாழ்கின்றாள் என்று கூறுகின்றார். இம்மூன்று செயலும் கற்புடைய பெண் மேற்கொள்ளும் கடமைகளாம் என்றும் கூறுகின்றார். அப்பாடல்:

" நல்விருந் தோம்பலின் நட்டாளாம் வைகலும்
இல்புறம் செய்தலின் ஈன்றதாய் — தொல்குடியின்
மக்கள் பெறலின் மனைக்கிழத்தி இம்மூன்றும்
கற்புடையாள் பூண்ட கடன். " [பா. எ. 64]

**சமுதாயச் செய்திகள் :**

இவ்வுலகில் மூன்று பேரை உறவினராகக்கொண்டு வாழ்தல் மிக இனிது என்று ஒரு பாடலில் கூறுகின்றார்.

முயற்சியுடையான் என்பான் கடன்படாமல் வாழ்பவன் என்றும், வேளாளன் என்பான் விருந்து புறத்தே இருக்கத் தனித்து உண்ணாதவன் என்றும், கோளாளன் என்பான் ஒருவர் சொல்லிய வற்றை எஞ்ஞான்றும் மறவாதவன் என்றும் ஆகிய இம்மூவரையும் நம்வாழ்வில் உறவினராய்க் கொண்டு வாழ்தல் மிகவும் இனிமை தரும் என்று கூறுகின்றார்.

"வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான்" என்னும் தொடர் அறிமுகமான தொடர் எனினும் நூல்வழி அறிமுகம் புதுமையேயாகும் என்பதில் ஐயமில்லை. அப்பாடல் :

> "தாளாளன் என்பான் கடன்படா வாழ்பவன்
> வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான்
> கோளாளன் என்பான் மறவாதான் இம்மூவர்
> கேளாக வாழ்தல் இனிது." [பா. எ. 12]

மற்றுமொரு பாடலில் இவ்வுலகில் எல்லோரும் வாழ்வதற்காகவே உணவு உண்டாலும் அவர்களிலும் சிலரே வாழ வேண்டியவர்கள் என்றும் பிறர் உலகிற்கு நோயே என்றும் கூறிக் காட்டுகின்றார்.

உலகம் பழிக்குமே என்னும் பழிப்புக்கு அஞ்சாமல் உயிர் வாழ் கின்ற பசு போன்றவனும், கேடு வந்த பொழுது தான் கொண்ட அருந்தவம் விட்டவனும், மனைவிக்கு அஞ்சியே வாழ்கின்ற எருது போன்றவனும் இம்மூவரும் நெல் உண்டல் நெஞ்சிற்கே ஒரு நோய் ஆகும் என்று கூறுகின்றார். அப்பாடல்:

> "பழியஞ்சான் வாழும் பசுவும் அழிவினால்
> கொண்ட அருந்தவம் விட்டானும் — கொண்டிருந்து
> இல்லஞ்சி வாழும் எருதும் இவர் மூவர்
> நெல்லுண்டல் நெஞ்சிற்கோர் நோய்." [பா. எ. 79]

**பிறப்பே துன்பம் :**

இவ்வுலகில் பல்வேறு பிறப்புக்கள் உண்டு என்றும், ஒவ்வொரு பிறப்பும் ஒவ்வொருவகையில் துன்பத்தையே தரும் என்றும் சமய வாதிகள் கூறும் கருத்தினை அப்படியே ஏற்றுக்கொண்ட இவ்வாசிரியர் ஒரு பாடலில் இதனை விளக்கிக் காட்டுகின்றார்.

பேயாய்ப் பிறந்தால் மிகுந்த பசி வருத்தத்தால் துன்பமும், மிருகமாய்ப் பிறந்தால் மிகுந்த அச்சத்தால் துன்பமும் உயர்ந்த பிறப்பாம் மக்களாய்ப் பிறந்தால் வறுமையால் துன்பமும் இருக்கின்றமையால் எப்பிறப்பும் துன்பத்தையேதரும் என்றும், ஆகவே இந்தப் பிறவிப் பிணி நீங்க நாம் முயற்சிக்க வேண்டும் என்றும் கூறுகின்றார். அப்பாடல்:

"பேஎய்ப் பிறப்பில் பெரும்பசியும் பாஅய்
விலங்கின் பிறப்பின் வெருவும் — புலந்தெரியா
மக்கட் பிறப்பின் நிரப்பிடும்பை இம்மூன்றும்
துக்கப் பிறப்பாய் விடும்." [பா. எ. 60]

**மெய்ப்பொருள் கண்டு வாழ்வார் :**

பொய்ப் பொருள் நீங்கி மெய்ப்பொருளைக் கண்டு வாழவேண்டும் என்னும் கூற்றினை ஏற்றுக் கொண்ட இவ்வாசிரியர் அங்ஙனம் வாழ்வார் எங்ஙனம் இருப்பார் என்று ஒரு பாடலில் விளக்குகின்றார்.

தன்னை மற்றொருவன் வைத பொழுது அதனை வாழ்த்தாக ஏற்றுக் கொண்டவனும், கூழை நெய்பெய்த சோறென்று ஏற்பானும், கைப்பு உணவினை வெல்லக்கட்டி என்று உண்பானும் இம்மூவர் மெய்ப் பொருள் கண்டு வாழ்பவராவர்.

மெய்ப் பொருள் கண்டவர்கள் உடலும் உயிரும் வேறு வேறானது என்று கொண்டு வாழ்பவர் ஆதலால் தன்னை ஒருவன் வைதபொழுது இவன் வைதது உடலையேயன்றி உயிரைச் சேராது என்று உளங் கொண்டு ஏற்பார் என்றும், நல்லுணவும் கைப்புணவும் மண்ணின் நிலைகளே அன்றி அது உண்மையல்ல எனும் நிலையில் ஏற்பார் என்றும் கருத்துப்பட இப்பாடல் அமைந்திருத்தலை எண்ணிமகிழலாம். அப்பாடல்:

"வைததனை இன்சொல்லாக் கொள்வானும் நெய்பெய்த
சோறென்று கூழை மதிப்பானும் — ஊறிய
கைப்பதனைக் கட்டியென்று உண்பானும் இம்மூவர்
மெய்ப்பொருள் கண்டுவாழ் வார்." [பா. எ. 48]

**நிறைவுரை :**

இங்ஙனம் பல்வேறு நிலையில் சமுதாயத்தை நினைந்து அரிய பல கருத்துக்களை நமக்கு அளித்திருக்கும் நல்லாதனார் மிகவும் நல்லவரே! இவரைப் போன்ற சங்கப் புலவர்களின் சிந்தனை நமக்குப் பல்லாற்றானும் பயன்படும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. வையத்துள் வாழ்வாங்கு வாழ இதுபோன்ற இலக்கியங்களைத் தெளியக் கற்றும் அதன்வழி நின்றும் பயன்பெறுவோம் என உறுதிகொள்வோம்.

# திருவருட்பாவில் சைவசித்தாந்தம்

'சித்தாந்தப் புலவர் மணி'

திரு. ந. ரா. முருகவேள் M, A., M. O. L.

## 1. முன்னுரை :-

திருவருட்பிரகாச வள்ளலார் என்னும் இராமலிங்க அடிகளார் பாடியருளிய திருவருட்பாத் தொகுதியில், "மகாதேவமாலை" என்னும் செய்யுட்பகுதி ஒன்று உள்ளதனை, அன்பர்கள் அனைவரும் அறிவர். அதன் முதற்பாடலாக விளங்குவது,

"கருணை நிறைந்து, அகம்புறமும் துளும்பி வழிந்து,
உயிர்க்கெல்லாம் களைகண் ஆகித்
தெருள் நிறைந்த இன்பநிலை வளர்க்கின்ற
கண்ணுடையோய்; சிதையா ஞானப்
பொருள் நிறைந்த மறையமுதம் பொழிகின்ற
மலர்வாயோய்; பொய்ய னேன்றன்
மருள் நிறைந்த மனக்கருங்கற் பாறையும்உட்
கசிந்துஉருக்கும் வடிவத் தோயே !"

என்னும் அழகிய திருப்பாடல்; "இறைவன் கருணை நிறைந்தவன்; உள்ளும் புறம்பும் நீக்கமறக் கலந்து நிறைந்திருப்பவன்; உயிர்களின் துன்பங்களையெல்லாம் போக்கியருள்பவன்; உயிர்களுக்கு அறிவை வளர்த்து, அவைகளை இன்பநிலை பெறுமாறு செய்விப்பவன்; அவனுடைய திருவாயினின்றே ஞானப்பொருள் நலங்கள் நிறைந்த வேதங்கள் தோன்றின ; அவனுடைய செயலும் இயலும் ஆகிய வடிவமானது, எத்தகைய அறியாமை மிக்கவர்களின் கருங்கல் மனத்தையுங்கூடக் கசிந்து உருகுமாறு செய்துவிடும் சிறப்பு உடையது" என்பது, இப்பாடலின் பொதுவான திரண்ட பொருள். இதன்கண் சைவசித்தாந்தச் செம்பொருள் நலங்கள் பலப்பல அமைந்து செறிந்திருத்தல், அறிந்து இன்புறத்தக்கது.

## 2. சொற்பொருள் நலங்கள் :-

இனிய சிறந்த சொற்களால், எளிய தெளிவான நடையில், ஒவ்வொரு சொல்லும் சொற்றொடரும் ஆழ்ந்த அநுபவ நுண்பொருட் செறிவு உடையதாகத் திகழ, இத் திருப்பாடல் அமைந்துள்ளது.

இறைவன் கருணையையே தனக்குரிய இயல்பாகக் கொண்டவன்; இறைவனே வேதாகமங்களை அருளிச்செய்தவன்; அவன்றன் திருமேனியும், உறுப்புக்களும், கருவிகளும், தொழில்களும் ஆகியன எல்லாம் அருளாலேயே அமைந்தவை; அவனது திருவருளே உயிர்களுக்கெல்லாம் ஆதாரம்; அவனே உயிர்கள்தோறும் உயிர்க்குயிராய்ப் புகுந்து நின்று இயக்குப்வன்; இறைவனே ஐந்தொழில்களையும் நிகழ்த்தி, சர்வ சீவ சாட்சியாய் இலங்குகின்றான் என்னும் பற்பல. அரிய சாத்திர நுண்பொருள்கள், இப்பாடலின்கண் ஒருங்கு தொகுத்துச் சுருங்கச் சொல்லப்பெற்றுள்ளன.

3 **பதசாரங்கள் :-**

இதன் பொருள்நலம் எண்ணுந்தோறும் எண்ணுந்தொறும், மொழிக்குமொழி தித்திப்பாக விளங்குகின்றது. இராமலிங்கர் "அருட்பெருஞ்சோதி தனிப்பெருங் கருணை" என்னும் அரிய பொருள் மொழியினை உலகுக்கு அளித்தவராதலின், அவர்தம் பாடல் தொடங்கும்போதே, "**கருணை நிறைந்து**" எனத் தொடங்குகின்றது. பெருகிப் பரவுதல் கருணைக்கு இயல்பாகலின் "**துளும்பி வழிந்து**" எனப்பட்டது. அஃது உள்ளே துளும்பி, வெளியே வழிதலின், "**அகம்புறமும்** துளும்பி வழிந்து" என்றார். மறையை "**அமுதம்**" என்றும், வாயை "**மலர்**" என்றும் உருவகம் செய்த பொருத்தம், சிறப்புடையது. மறையைப் "**பொருள் நிறைந்தது**" என்றும், "**சிதையா ஞானப்** பொருள் நிறைந்தது" என்றும் விசேடித்தது போற்றத்தக்கது. இன்பநிலை என்று வாளாகூறாமல், அறியாமை நீங்கி அறிவு பெருகிய வழியே இன்பம் உண்டாகுமாதலின், "**தெருள் நிறைந்த இன்பநிலை**" என்றது நுட்பம்மிக்கது. மனத்தினை "**மருள் நிறைந்தது**" என்றும், "**கருங்கல்-பாறை**" என்றும், அஃது இறைவனால் கசிதல் உருகுதல் ஆகிய இருவகை நிலைகளை எய்தியது என்றும் குறிப்பிட்டதிறம், உன்னியுன்னி உவகையுறுதற்கு உரியது. இவற்றையெல்லாம் அவரவரே அன்புடன் நுண்ணிதிற் பல்கால் ஓதி, எண்ணியுணர்ந்து இன்புறக்கடவர். ஆதலின் அவற்றைவிடுத்து, இப்பாடற்கண் இறையியல்நூல்கள் (Theology, Philosophy கூறும் இறைமை இலக்கணங்கள் பலவும், ஒருவாற்றால் தொகுத்துணர்த்தப்பட்டுள்ள சிறப்பினைமட்டும் ஈண்டு நாம் சுருக்கமாகக்கண்டு இன்புறுவோம்.

4. **இருவகை இயல்பு :**

இறைவனின் இயல்பினைப் பொதுவியல்பு (தடத்த லட்சணம்) என்றும், சிறப்பியல்பு (சொரூப லட்சணம்) என்றும் சாத்திரங்கள் இரண்டாகக் கூறும். (1) இத்திருப்பாடலில் "கருணை நிறைந்து, அகம்புறமும் துளும்பி வழிந்து, உயிர்க்கெல்லாம் களைகண் ஆகித் தெருள்

நிறைந்த இன்பநிலை வளர்க்கின்ற கண்ணுடையோய்! சிதையா ஞானப்பொருள் நிறைந்த மறையமுதம் பொழிகின்ற மலர்வாயோய்'' என்பது வரையில் **பொதுவியல்பு** கூறப்பெற்றது. (2) ''பொய்ய னேன்தன் மருள் நிறைந்த மனக்கருங்கற் பாறையும் உட்கசிந்து உருக்கும் வடிவத்தோயே'' என்பதனுல் **சிறப்பியல்பு** விளக்கப் பெற்றது.

**5. எண்குணங்கள் :**

இறைவனை எட்டுக்குணங்கள் உடையவனுக நூல்கள் கூறும். தெய்வப்புலவர் திருவள்ளுவரும் ''எண்குணத்தான் தாளை வணங் காத் தலை'' என்னும் திருக்குறளில், அங்ஙனம் குறித்துள்ளார். அவ்வெட்டுக் குணங்களும், இத்திருவருட்பாவில் தொகுத்துச் சுட்டப்பெற்றுள்ளன.

(1) ''உயிர்க்கெல்லாம் களைகண் ஆகி''- தன்வயத்தனுதல்.

(2) ''வடிவத்தோய்''- தூய உடம்பினனுதல்.

(3) ''சிதையா ஞானப் பொருள் நிறைந்த''- இயல்பாகப் பாசங்களின் நீங்குதல்.

(4) ''மறையமுதம் பொழிகின்ற மலர்வாயோய்''

(5) -இயற்கையுணர்வு, முற்றுணர்வு.

(6) ''கருணை நிறைந்து வழிந்து''- பேரருள் உடையனுதல்.

(7) ''மனக்கருங்கற் பாறையும் உட்கசிந்து உருக்கும்''- முடிவிலாற்றல் உடையனுதல்.

(8) ''இன்பநிலை வளர்க்கின்ற கண்ணுடையோய்''- வரம்பில்இன்பம் உடையவனுதல்.

**சத்து சித்து ஆனந்தம் :**

இறைவன், சத்து (உண்மை), சித்து (அறிவு), ஆனந்தம் (இன்பம்) என விளங்குகின்றனன் என நம்வேதாகமஉபநிடதங்கள் யாவும் முழங்கும். இம்மூவகை இயல்பும் இப்பாடலில் புலப்படுத்தப் பெற்றுள்ளன.

(1) ''சிதையா ஞானப் பொருள்'' என்றது, சத்தாதல்.

(2) ''கருணை நிறைந்து துளும்பி வழிந்து மறையமுதம் பொழிகின்ற மலர்வாயோய்'' என்றது சித்தாதல்.

(3) ''தெருள் நிறைந்த இன்பநிலை வளர்க்கின்ற கண்ணுடையோய்'' என்றது, ஆனந்தமாதல்.

## 7. திருவைந்தெழுத்து :

திருவைந்தெழுத்து என்னும் பஞ்சாக்கரத்தின் சிறப்பு, வேதாகமங்கள் அனைத்தாலும் விரித்தோதப்படுவதாகும். நமசிவய அல்லது சிவயநம என்னும் திருவைந்தெழுத்தில், சிகரம் சிவத்தையும், வகரம் திருவருளையும், யகரம் ஆன்மா என்னும் உயிரையும், நகரம் திரோதானசத்தி எனப்படும் மறைப்பாற்றலையும், மகரம் பாசம் ஆகிய ஆணவமலத்தையும் குறிக்கும் எனப் பெரியோர்கள் கூறுவர். இத்திருவைந்தெழுத்துப்பற்றிய குறிப்பும், இப்பாடலில் அமைந்துள்ளது

(1) "சிதையா ஞானப் பொருள்" - சிகரம், சிவம்.

(2) "மனக் கருங்கற் பாறையையும் உட்கசிந்து
உருக்கும் வடிவத்தோய்" - வகரம், திருவருள்.

(3) "உயிர்க்கெல்லாம்" - யகரம், ஆன்மா.

(4) "களைகண் ஆகி" - நகரம், திரோதானசத்தி.

(5) "பொய்யனேன்றன் மருள் நிறைந்த மனம்" -
மகரம், பாசம்.

## 8. சிவஞானபோதம் :

நமது தமிழ்மொழியின் நீதி நூல்களுள் திருக்குறளும், பக்திநூல்களுள் திருவாசகமும், இலக்கண நூல்களுள் தொல்காப்பியமும்போல• தத்துவ நூல்களுள் தலைசிறந்து நிற்பது **சிவஞானபோதம்.** அது பன்னிரண்டு சூத்திரங்களால் இயன்றது. அவைகள் முறையே பதியுண்மைக்குப் பிரமாணம், பாசம் உண்மைக்கும் பிரமாணம், பசு உண்மைக்குப்பிரமாணம், பசுஇலக்கணம், பாசஇலக்கணம், பதியிலக்கணம், ஆன்மாவின் சிறப்பியல்பு, ஞானத்தினை யுணரும்முறைமை, ஆன்மசுத்தி, பாசநீக்கம், சிவப்பேறு, அணைந்தோர்தன்மை என்னும் பன்னிரண்டு பொருள்களை விளக்கும். இத்தகைய சிவஞானபோதம் என்னும் செந்தமிழ்த் தத்துவஞான நூலின் பன்னிரு சூத்திரப் பொருள்நுட்பக் குறிப்புங்கூட, ஒருவாற்ருல் இத்திருவருட்பாப் பாடலில் தொகுத்துச் சுட்டப்பெற்றுள்ளது எனலாம். இப்பாடலில்:

### பன்னிரு சூத்திரங்கள் :

(1) "உயிர்க்கெல்லாம் களைகண்" என்றதனுல் உலகங்களைப் படைத்துக் காத்து ஒடுக்கி உயிர்களுக்கு நலம்புரியும் கடவுளாகிய **பதியுண்மையும்,** (2) "களைகண் ஆகி" என்றதனுல் அவையே யாய் - தானேயாய் - அவையே தானேயாய் நின்று, இறைவனுல் இயக்கப்படும் **பாச உண்மையும்** (3) "பொய்யனேன்" என்றதனுல்

**பசுவுண்மையும்,** (4) "மருள் நிறைந்த மனக்கருங்கற் பாறை" என்றதனால் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி முதலிய ஐந்தவத்தைப்படும் **பசுவின் இலக்கணமும்,** (5) "கருணை நிறைந்து அகம்புறமும் துளும்பி வழிந்து" என்றதனால் முதல்வனின் சிற்சத்தியாகிய கருணை, உயிர்களின் உள்ளும் புறம்புங்கலந்து உதவிபுரிதலாகிய **பாச இலக்கணமும்,** (6) "சிதையா ஞானப் பொருள்" என்றதனால் பாசஞானத்தாலும், பசுஞானத்தாலும் உணரப்படாமல் சிவஞானம் ஒன்றால்மட்டும் உணரப்பெறும் **பதியின் இலக்கணமும்,** (7) "தெருள் நிறைந்த" என்றதனால் சத்தோடு கூடிச் சத்தாயும், அசத்தோடு கூடி அசத்தாயும் அழுந்தும் சதசத்தாகிய **ஆன்மாவின் சிறப்பிலக்கணமும்,** (8) "மறையமுதம் பொழிகின்ற மலர் வாயோய்" என்றதனால் **ஞானத்தை உணரும் முறைமையும்,** (9) "கண்ணுடையோய்" என்றதனால் ஊனக்கண் பாசம் உணராப் பதியை ஞானக் கண்ணினிற் சிந்தை நாடுதலாகிய **ஆன்மசுத்தியும்,** (10) "வளர்க்கின்ற" என்றதனால் அவனே தானே ஆகிய அந்நெறி ஏகனாகி இறைபணி நிற்க மலமாயை தன்னொடும் வல்வினை தீர்தல் ஆகிய **பாச நீக்கமும்,** (11) "இன்பநிலை" என்றதனால் காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல் காண உள்ளத்தைக் கண்டு காட்டப் பெறுதலாகிய **சிவப்பேறும்,** (12) "உட்கசிந்து உருக்கும் வடிவத்தோயே" என்றதனால் சீவன்முத்தர் இயல்பாகிய **அணைந்தோர் தன்மையும்** சுட்டப் பெற்றிருத்தல் காணலாம்.

**10.** முடிவுரை :

இன்னோரன்ன பலப்பல நுண்ணிய சைவ சித்தாந்த நூற் பொருள்களை யெல்லாம், தன்னகத்தே பொதிந்துகொண்டு தலை சிறந்து விளங்கும் இப்பாடலைப் போன்ற எத்தனையோ பல தெய்விக நலப் பாடல்களையுடைய, இராமலிங்க வள்ளலாரின் திருவருட்பாப் பாடல்களை, நாம் இடையறாது ஓதி ஓதி, இறையருள் பெற்று உய்ய முயல்வோமாக.

---

# செய்திகள்

## ஆயில்யத்திருநாள் ஆலயவழிபாடு

திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீனம் 26 ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ஜன்ம நக்ஷத்திரமாகிய ஆயில்யத்திருநாள் ஆலய வழிபாடு 11—3—79 ஞாயிற்றுக்கிழமை நண்பகல் திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான திருவிடைமருதூர் அருள்மிகு மகாலிங்கப் பெருமான் ஆலயத்தில் விசேஷ அபிஷேக ஆராதனை களுடன் சிறப்பாக நடைபெற்றது. வழிபாட்டின்போது தலத்திருப் பதிகம் பாராயணம் செய்யப்பெற்று, தலத்திருப்பதிகங்கள் அடங்கிய நூல் குறிப்புரையுடன் வெளியிட்டு வழங்கப்பெற்றது. காலை 10 மணி அளவில் சமய விரிவுரைக் கூட்டம் நடைபெற்றது. திருபுவனம் தேவஸ்தானம் திருமுறைப்பணியாளர் திரு. S. தண்டபாணிதேசிகர் அவர்கள் திருமுறைப்பாடல்களைப் பாடினார்கள். தருமையாதீனப் புலவர் திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ. அவர்கள் திருவிடை மருதூர் மும்மணிக்கோவை என்ற தலைப்பில் விரிவுரையாற்றினார்கள். அன்பர்கள் பலர் வழிபாட்டில் கலந்துகொண்டும் விரிவுரைகளைக் கேட்டும் பயன்பெற்றனர். திருக்கோயில் மேற்பார்வையாளர்களும் அலுவலர்களும் வழிபாட்டின்போது உடன் இருந்து பல்லாற்றானும் உதவினார்கள்.

•

7—4—79 சனிக்கிழமை காலை திருநீலக்குடி அருள்மிகு நீலகண் டேசுவரர் திருக்கோயிலிலும் மாலை ஆடுதுறை எனவழங்கும் திருத் தென்குரங்காடுதுறை அருள்மிகு ஆபத்சகாயேசுவரர் திருக்கோயி லிலும் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் வழிபாடு சிறப்பாக நடைபெற்றது. வழிபாட்டின்போது, திருபுவனம் தேவஸ்தானம் திருமுறைப் பணியாளர் திரு. S. தண்டபாணி தேசிகர் அவர்களால் திருநீலக்குடியிலும் திருத்தென்குரங்காடுதுறையிலும் அவ்வத்தலத் திருப்பதிகம் பாராயணம்செய்யப்பெற்றது. தலப்பதிகங்கள் அடங்கிய நூல் வெளியிட்டு வழங்கப்பெற்றது. திருநீலக்குடி திருக்கோயிலில் வழிபாட்டிற்குப் பின்னர் தருமையாதீனப் புலவர், வித்துவான் திரு. வி. சா. குருசாமிதேசிகர் எம். ஏ. அவர்கள் "திருமுறை வழிபாடு" என்னும் தலைப்பில் விரிவுரையாற்றினார்கள்.

திருத்தென்குரங்காடுதுறையில் மாலை 4 மணி அளவில் ஆடுதுறை அப்பர் அருள்நெறிக் கழகத்தலைவர் திரு. மு. சி. ப. கோவிந்தசாமி செட்டியார் அவர்கள் தலைமையில் சமயப்பிரசாரகர் திரு. கோ. சிவஞானம் அவர்கள் திருஞானசம்பந்தர் என்ற தலைப்பிலும், ஆடுதுறை ஸ்ரீ குமரகுருபரர் மேல்நிலைப்பள்ளி வித்துவான் திரு. சு. வடிவேல்பிள்ளை அவர்கள் திருநாவுக்கரசர் என்ற தலைப்பிலும், வித்துவான் திரு. வி. சா. குருசாமிதேசிகர் எம். ஏ. அவர்கள் திருமுறைச்சிறப்பு என்றதலைப்பிலும் விரிவுரையாற்றினர். ஆடுதுறை திரு. வி. வைத்தியலிங்கம் செட்டியார் அவர்கள் நன்றியுரைக்குப் பின் சமயவிரிவுரை நிறைவுற்றது.

## வசந்தநவராத்திரி விழா

திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீனம் ஸ்ரீ ஆனந்தபரவசர் பூங்காவில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருந்து அருள் வழங்கும் ஸ்ரீ வனதுர்க்காதேவிக்கு வசந்தநவராத்திரிவிழா 28-3-79 புதன்கிழமைமுதல்தொடங்கிச்சிறப்பாகநடைபெற்றது. இந்நாட்களில் ஸ்ரீ வனதுர்க்காதேவிக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகளும், உலக நலனை முன்னிட்டு நாள்தோறும் நவசக்தி அருச்சனை செய்வதன் மூலம் லக்ஷார்ச்சனையும் நிகழ்த்தப்பெற்றன. 5—4—79 வியாழக்கிழமை இரவு லக்ஷார்ச்சனை நிறைவுபெற்றது தேவியின்சந்நிதியில் தேவீமாகாத்மிய பாராயணம் அபிராமி அந்தாதி பாராயணம் முதலிய பாராணயங்கள் நடைபெற்றன. இந்நாட்களில் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றி அன்பர்களுக்கு அருட்பிரசாதங்கள் வழங்கி ஆசியருளினார்கள். பக்தர்கள் பலர் வந்து வழிபட்டுப் பயன்பெற்றனர்.

## பங்குனித் திங்கள் பெருவிழா

**வேளூரில் :**

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான வேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமிதேவஸ்தானத்தில் பங்குனித்திங்கள் பெருவிழா 1—4—79 ஞாயிற்றுக்கிழமை முதல் தொடங்கி பத்து நாட்கள் சிறப்பாக நடைபெற்றது. 1—4—79 அன்று கொடியேற்றமும் 5—4—79 அன்று சகோபுரக்காட்சியும், 7. 8—4—79 ஆகிய இருநாட்களிலும் திருத்தேர்த் திருவிழாவும், 10—4—79 அன்று சித்தாமிர்த தீர்த்தத்தில் பஞ்சமூர்த்திகள் தீர்த்தங்கொடுத்தருளலும் சிறப்புத் திருநாட்களாக நடைபெற்றன. பக்தர்கள் விழாவில் பங்கு கொண்டு வழிபட்டுப் பயன்பெற்றனர், திருவிழா நாட்களில் மாலையில்

சமய விரிவுரைகளும் நடைபெற்றன. 2—4—79 அன்று தருமை யாதீனத் தமிழ்ப்புலவர் வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ, அவர்கள் "சம்பந்தர் தமிழ்" என்ற தலைப்பில் விரிவுரை யாற்றினார்கள். 3—4—79 அன்று திருமுறை விழாவும் தேவார வகுப்பு ஆண்டு விழாவும் நடைபெற்றன, தருமையாதீனத் தமிழ்ப் புலவர் டாக்டர் திரு. சொ. சிங்காரவேலன் எம்.ஏ பிஎச்.டி.அவர்கள் "அப்பர் அருந்தமிழ்" என்ற தலைப்பில் விரிவுரையாற்றி, தேவார வகுப்பு மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கினார்கள். திருமுறைகள் யானைமேல் அலங்காரம்செய்து பண்ணிசைவாணர்களின் திருமுறைப் பாராயணத்தோடு திருவீதியுலா நிகழ்த்தப்பெற்றது. 5—4—79 அன்று திருக்கருகாவூர், தருமையாதீன சமயப் பிரசாரகர், திரு. கோ. சிவஞானம் அவர்கள் "சுந்தரர் செந்தமிழ்" என்ற தலைப்பில் விரிவுரையாற்றினார்கள். அன்பர்கள் பலர் விரிவுரைகளைக் கேட்டுப் பயன்பெற்றனர்.

**திருபுவனத்தில் :**

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருபுவனம் ஸ்ரீ கம்பகரேசுவரசுவாமி தேவஸ்தானத்தில் 1—4—79 ஞாயிற்றுக்கிழமை முதல் பங்குனித்திங்கள் பெருவிழா சிறப்பாக நடைபெற்றது. 1—4—79 அன்று கொடியேற்றமும், 5—4—79 அன்று தன்னைத்தான் அருச்சித்தல், சகோபுரத்தில் வெள்ளி இடப வாகனக் காட்சியும், 7—4—79 அன்று திருக்கல்யாணத்திருவிழாவும் வெள்ளிரதத்தில் திருவீதியுலாவும், 9—4—79 அன்று திருத்தேர்த் திருவிழாவும், 10—4—79 அன்று காவிரியில் தீர்த்தம்கொடுத்தருள லும் சிறப்புத் திருநாட்களாக நடைபெற்றன. திருவிழா நாட்களை முன்னிட்டு 2—4—79 அன்று மாலை மாயூரம் ஸ்ரீகணநாதர் பொம்மை நாடக சபையினரின் பொம்மலாட்டமும், 6—4—79 அன்று திரு முறை விழாவும், தேவார வகுப்பு ஆண்டு விழாவும் நடைபெற்றன திருமுறை விழாவன்று தருமையாதீனத் தமிழ்ப் புலவர், திரு, கு. சுந்தரமூர்த்தி எம். ஏ. அவர்கள் "திருமுறைச் சிறப்பு" என்ற தலைப்பில் விரிவுரையாற்றி, தேவார வகுப்பு மாணவர்களுக்குப் பரிசு கள் வழங்கினார்கள். திருமுறைகள் யானைமேல் ஒப்பனைசெய்யப் பெற்று, பண்ணிசைவாணர்களின் திருமுறைப் பாராயணத்துடன் திருவீதியுலாவாக எழுந்தருளச்செய்யப்பெற்றது. பக்தர்கள் பலர் விழாவினைத் தரிசித்தும் விரிவுரைகளைக் கேட்டும் பயன்பெற்றனர்

## பேரளத்தில் உருத்திரபாதத் தீர்த்தத்திருநாள்

திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான பேரளம் ஸ்ரீ சுயம்புநாத சுவாமி தேவஸ்தானத்தில் உருத்திரபாதத்

தீர்த்தத் திருநாள் 10–4–79 செவ்வாய்க்கிழமை சிறப்பாக நடைபெற்றது. அன்று காலை பஞ்சமூர்த்திகளுக்கும் விசேஷ அபிஷேக ஆராதனைகளும் அக்கினிபுஷ்கர்ணித் தீர்த்தத்தில் தீர்த்தம் கொடுத்தருளலும் இரவு வீதியுலாவும் நிகழ்ந்தன. பக்தர்கள் பலர் வந்து தரிசித்துப் பயன்பெற்றனர். அன்று மாலை 6 மணி அளவில் தருமையாதீன சமயப்பிரசாரகர் திரு. கோ. சிவஞானம் அவர்கள் "பார்வதி திருமணம்" என்ற தலைப்பில் விரிவுரையாற்றினார்கள். அன்பர்கள் பலர் கேட்டுப் பயன்பெற்றனர்.

—:★:—

## திருவாமூரில்
# அருள்மிகு அப்பர் சுவாமிகள் குருபூஜை விழா

சைவ சமயாசாரியருள் இரண்டாமவராகிய அருள்மிகு அப்பர் சுவாமிகளின் குருபூஜைப் பெருவிழா, அவர்கள் அவதாரத்தலமாகிய திருவாமூரில் 1979, ஏப்ரல் 20, 21, 22 வெள்ளி, சனி, ஞாயிறு ஆகிய மூன்று நாட்களிலும் சிறப்பாக நடைபெறுகிறது.

மூன்று நாட்களிலும், கருத்தரங்கம், பட்டிமண்டபம், வழக்காடு மன்றம், பண்ணாராய்ச்சி மாநாடு, தேவார இசையரங்குகள், இன்னிசைக் கதை, பொம்மலாட்டம் முதலிய சிறப்பு நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன.

உயர்நீதிமன்ற நீதிபதி, மற்றும் தமிழ்ப் பேரறிஞர்கள், பண்ணிசைவாணர்கள் முதலியோர் விழாவில் பங்கேற்கின்றனர்.

குருபூஜைத் திருநாளன்று தருமையாதீனம் இருபத்தாறுவது குருமகாசந்நிதானம் **ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** எழுந்தருளி வழிபாடாற்றி, மதுரை 'தேவாரமணி' திரு. எஸ். சயிலப்ப ஓதுவார் அவர்களுக்குத் **"திருமுறைக் கலாநிதி"** என்னும் பட்டம் வழங்கிப் பொற்கிழி அளித்து ஆசி வழங்கியருள்கிறார்கள்.

"ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி"

# எதிர்காலம்

## ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

**சித்தார்த்தி௵ சித்திரைமீ 1உ முதல் 31உ முடிய.**

**( 14—4—79 முதல் 14—5—79 முடிய )**

| | | | |
|---|---|---|---|
| ல பு செ. | சூ | | |
| கே சு | இராசி | | கு |
| | | | சனி ரா |
| | | சந் | |

| | | | |
|---|---|---|---|
| செ | கே சூ | சு | |
| சந் | அம்ஸம் | | ல சனி |
| பு | | | |
| | | ரா | கு |

ஸ்ரீ காளயுக்தி௵ சௌரமான பங்குனிமீ 30உ சாந்திரமானம் பகுளபட்ச துதியைதிதி சுக்கிரவாரம் சுவாதிநக்ஷத்திரம் தைதுலை கரணம் கூடிய காலத்தில் சூரிய உதயம் முதல் 56 நாழிகை 59 விஞடிக்கு மறுதின ஸ்திர வாரம் சூரியோதயம் முன் 4 நாழிகை யள வில் மீனலக்கினத்தில் ஸ்ரீ லோகரட்சகரான சூரிய பகவான் மீன ராசியிலிருந்து மேஷராசி சங்கிரமணமாக கலியுகாப்தம் 5080 சித்தார்த்தி ௵ சௌரமான சித்திரை மாதப் பிரவேசம் செய்கின்ருர். சித்திரை மாதம் 1உ ஸ்திரவாரம் விஷு புண்யகாலம் ஆகும். சங்கிரம வாராதிபன் சனீஸ்வரன் சித்தார்த்தி ௵த்தின் மந்திரியா கிருர். சங்கிரமகால கிரகஸ்திதியின் பலனுவது லோக நாடுகளில் சுபிட்சம் மேலிடும். ஜன சமுதாயத்திற்கு நல்லன ஏற்படும். ஆசியாவின் தென்கிழக்கு நாடுகளில் ஒரு நாட்டில் ஒருநாடு ஆக்கிர மிப்பு செய்தல், ஊடுருவல், வரம்பு மீறல்கள் யாவும் ஆன்ருேர்களில் நல்லுரைகளுக்கு உட்பட்டு நிற்கும். தேசங்களில் மந்திரிகள் ஜனுதி பதிகள் நீதியாக தேசபரிபாலனம் செய்து பிரஜாநலம் காப்பார்கள். லோகத்தில் ஆங்காங்கு அறஸ்தாபனங்களில் உள்ள தரும நெறியா ளர்கள் தெய்வ கைங்கரியங்களில் புண்ணிய காரியங்களை நடத்தி வருவார்கள்.

உலகத்திலுள்ள திருமடங்கள் ஆசாரிய பீடங்களில் உள்ள தவமுனிவர்களான சிவஞானகுருமகான்கள் லோகத்துக்குத் திருவாய் மலர்ந்து பிரஸ்தாபிக்கின்ற புனிதமார்க்கத்தில் இவ்வுலகம் இயங்கும். தேசங்களில் எங்கும் தேவாலய நிர்வாகத்தில் உள்ள அறம் வழுவாத உத்தம சீலர்களின் உன்னத சாதனையில் திருக்கோயில்களில் சிறப்பு பூசைகள் திருவிழாக்கள் விமரிசையாக நடைபெறும். ஆங்காங்கு கோயில்களில் புராணப் பிரசங்கங்கள், தேவார பாராயணங்கள் வேத மந்திரங்களின் முழக்கங்கள், மேளவாத்தியங்கள், இன்னிசைகள் ஆகிய நிகழ்ச்சிகள் நிறையும். பக்தகோடிகள் இறைவனைத் தரிசித்து ஆனந்தபரவசமாவார்கள். லோகத்தில் சர்வபிரஜைகளும் சந்துஷ்டி நிலவ தூயவாழ்க்கை நடத்துவார்கள்.

**1. மேஷம் :- அசுவதி - பரணி – கார்த்திகை $\frac{1}{4}$**

( சு. சே. சோ. லா. - லி. லு. லே. லோ. - அ. )

மேஷராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் தனுதி சௌகரியங்கள் நல்லநிலைமையில் இருந்துவரும். முக்கியத்துவமான விஷயங்களுக்குத் தொடர்ந்த செலவினங்களும் இருந்துவரும். சகோதரருக்கு வெப்பாதிக்கத்தினுல் நலிவு ஏற்பட்டு உடன் குணமாகும். 17உக்கு மேல் பத்திரலிகித ஒப்பந்தங்களில் நற்பலன் ஏற்படும். புத்திரர் நலம் சாதாரணமாக இருந்துவரும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். சித்திரைமீ 2, 3, 30, 31 தேதிகள் சந்திராஷ்டமம் வியாழன் வெள்ளி சுபமாகும்.

சித்தார்த்தி ஸூத்திய இராசி ஆதாயம் 11, விரயம் 5, ஆரோக்கியம் 7, அனுரோக்கியம் 2, இராஜபூஜிதம் 1, இராஜகோபம் 2, சுகம் 6, துக்கம் 3.

**2, ரிஷபம் :- கார்த்திகை $\frac{3}{4}$ - உரோகிணி – மிருகசீர்ஷம் $\frac{1}{2}$**

( இ. ஊ. ஏ. - ஒ. வ. வி. வூ - வே. வோ. )

ரிஷபராசி 9 பாதங்களும் நற்பலனுக நடந்துவரும். குடும்பாபி விருத்தியில் பண ஆதாயங்கள் திருப்தியளிக்கும். சகோதரர் சகோதரிகளுக்கு நற்பாக்கியம்பெருகும். பசு பால்பிராப்தி திருப்தியளிக்கும். புத்திரர் பௌத்திரர்களின் நலம் நன்ருக இருந்துவரும். இல்லத்தில் மகிழ்ச்சிகரமான சம்பவங்கள் நடந்துகொண்டிருக்கும். தாம்பத்திய வாழ்க்கை சுமுகமாக நடந்துவரும். சித்திரைமீ 4உ 9 நாழிகை 34 விஞடிமுதல் 6உ 18 நாழிகை 2 விஞடி வரையில் சந்திராஷ்டமம். சனி ஞாயிறு சுபமாகும்.

சித்தார்த்தி ஸூத்திய இராசி ஆதாயம் 5, விரயம் 14, ஆரோக்கியம் 4, அனுரோக்கியம் 5, இராஜபூஜிதம் 3, இராஜகோபம் 5, சுகம் 6, துக்கம் 3.

**3. மிதுனம் :- மிருகசீர்ஷம் $\frac{1}{2}$ - திருவாதிரை – புனர்பூசம் $\frac{3}{4}$**

( கா. கி. - கு. க. ங. ச்சா. - கே. கோ. ஹ. )

மிதுனராசி 9 பாதங்களும் சுபபலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் நல்ல பண ஆதாயங்களை ஏற்படுத்தும். சகோதரர் சகோதரிகளின் நலம் நன்ருக இருந்துவரும். வீடு கட்டுதல் நாகரிக பொருள்கள் வாங்குதல் ஆகும். எழுத்துமூல லேவா தேவிகளில் 17உக்கு மேல் நற்பலன் இருந்துவரும். இராசாங்கத்தில் நன்மதிப்பு உண்டாகும். தார புத்திரர்களின் நலம் நன்ருக இருந்துவரும். சித்திரைமீ 6உ 18 நாழிகை 2 விஞடிமுதல் 8உ 24 நாழிகை 12 விஞடி வரையில் சந்திராஷ்டமம். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

சித்தார்த்தி ஞூத்திய இராசி ஆதாயம் 8, விரயம் 11, ஆரோக்கியம் 6, அஞரோக்கியம் 6, இராஜபூஜிதம் 0, இராஜ கோபம் 5, சுகம் 6, துக்கம் 3.

**4. கடகம் :- புனர்பூசம் $\frac{1}{4}$ – பூசம் – ஆயில்யம்.**

( ஹி. - ஹு. ஹே. ஹோ. ட. - டி. டு. டே. டோ. )

கடகராசி 9 பாதங்களுக்கும் நற்பலனுக நடந்துவரும். குடும் பாபிவிருத்தியில் பொன் பொருள் சேர்க்கை நல்ல விதத்தில் வந்து சேரும். சகோதரர் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். வித்துவத் துவம் கலைத்துறையில் 17உ முதல் இராசங்கபுகழை அளிக்கும். வீடு வாகனுதிகளின் சௌகரியம் மேலாக இருந்துவரும். செய்தொழிலில் எல்லாக்காரியங்களும் தீவிரமாக செயல்படும். தார புத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். சித்திரைமீ 8உ 24 நாழிகை 1 விஞடிமுதல் 10உ 30 நாழிகை 23 விஞடிவரையில் சந்திராஷ் டமம். புதன் வியாழன் சுபமாகும்.

சித்தார்த்தி ஞூத்திய இராசி ஆதாயம் 8, விரயம் 2, ஆரோக்கியம் 3, அஞரோக்கியம் 2, இராஜபூஜிதம் 1. இராஜ கோபம் 2, சுகம் 6, துக்கம் 3.

**5. சிம்மம் :- மகம் - பூரம் – உத்திரம் $\frac{1}{4}$**

( ம. மி. மு. மே. - மோ. ட. டி. டு. - டே. )

சிம்மராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பண வரவும் செலவும் சரிசமனுக இருந்துவரும். சகோதரர் மனவருத்தமாக இருப்பினும் 5உ முதல் சந்தோஷத்தில் ஒத்துழைப்பு தருவர். வித்துவத்துவம் கலைதுறையில் போட்டியாளர் கள் இருப்பினும் நன்மைகள் ஏற்பட்டுக் கொண்டிருக்கும். பிதாவின்

உடல் நலம் பாதித்துக் குணமாகும். தாரம் புத்திரர் இவர்களின் நலம் நன்ருக இருந்துவரும். சித்திரைமீ 10உ 30 நாழிகை 23 விஞடிமுதல் 12உ 38 நாழிகை 56 விஞடிவரையில் சந்திராஷ்டமம் வெள்ளி சனி சுபமாகும்.

சித்தார்த்தி ஞூத்திய இராசி ஆதாயம் 5, விரயம் 5, ஆராக்கியம் 1, அஞரோக்கியம் 1, இராஜபூஜிதம் 4, இராஜ கோபம் 2, சுகம் 6, துக்கம் 3.

**6. கன்னி :- உத்திரம் $\frac{3}{4}$ - ஹஸ்தம் - சித்திரை $\frac{1}{2}$**

( டோ. ப. பி. - பு. ஷ. ண. ட. - பே. போ. )

கன்னியாராசி 9 பாதங்களும் மிச்சிர பலஞக நடக்கும். மாதமுன் பகுதியைவிட பின்பகுதியில் விசேஷ பலனைத்தரும். ஜீவனேபாயத்தில் 17உக்கு மேல் செலவுடன் ஓர் நன்மை ஏற்படும். சகோதரியின் தொழில்துறை ஓங்கும். பிதாவின் உடல்நலம் பாதித்து உடன் குணமாகும். கணவன் மணைவியரிடையே உள்ள கருத்து மாறுதல் நீங்குவதாகும். புத்திரர் சௌக்கியம் நன்ருக இருந்து வரும். சித்திரைமீ 12உ 38 நாழிகை 56 விஞடி முதல் 14உ 52 நாழிகை 1 விஞடி வரையில் சந்திராஷ்டமம். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

சித்தார்த்தி ஞூத்திய இராசி ஆதாயம் 8, விரயம் 11, ஆரோக்கியம் 6, அஞரோக்கியம் 6, இராஜபூஜிதம் 0, இராஜகோபம் 5, சுகம் 6, துக்கம் 3.

**7. துலாம் :- சித்திரை $\frac{1}{2}$ – சுவாதி – விசாகம் $\frac{3}{4}$**

( ர. ரி. - ரு. ரே. ரோ. தா. - தி. து. தே. )

துலாராசி 9 பாதங்களும் மிச்சிர பலஞக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பண வருமானங்களும் போதிய வசதிகளும் திருப்தியாக இருந்துவரும். சகோதரர் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். பூமி இயந்திர வகையில் நற்பயன் வந்துசேரும். விவகாரங்கள் ஜெயிக்கும். புத்திரர்களின் சிறுசிறு உதவிகள் மகிழ்ச்சியளிக்கும். மனைவிக்கு சிரோபாதை வந்து உடன் குணமாகும். சித்திரைமீ 14உ 52 நாழிகை 1 விஞடி முதல் 17உ 10 நாழிகை 56 விஞடி வரையில் சந்திராஷ்டமம். செவ்வாய் புதன் சுபமாகும்.

சித்தார்த்தி ஞூத்திய இராசி ஆதாயம் 5, விரயம் 14, ஆரோக்கியம் 4, அஞரோக்கியம் 5, இராஜபூஜிதம் 3, இராஜகோபம் 5, சுகம் 6, துக்கம் 3.

**8. விருச்சிகம் :- விசாகம் $\frac{1}{4}$ - அனுஷம் - கேட்டை.**
(தோ. - ந. நி. நு. நே. - நோ. ய. யி. யு.)

விருச்சிக ராசி 9 பாதங்களும் சுபபலன் தரும். குடும்பாபி விருத்தியில் நாளுக்குநாள் முன்னேற்றம் ஏற்படும். சகோதரருக்கு சௌக்கிய பலன் தரும். 20உ முதல் வித்தியா வியாபாரதிகளில் கலைத்துறையில் பிரக்கியாதியும் வரவுகளும் ஏற்படும். பெற்றோர் நலம் நன்ருக இருந்து வரும். தாரபுத்திரர்களினுல் மகிழ்ச்சி ஏற்படும். சித்திரைமீ 17உ 10 நாழிகை 51 விஞடி முதல் 19உ 35 நாழிகை 43 விஞடி வரையில் சந்திராஷ்டமம். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

சித்தார்த்தி வருஷத்திய இராசி ஆதாயம் 11, விரயம் 5, ஆராக்கியம் 0, அஞரோக்கியம் 4, இராபூஜிதம் 4, இராஜகோபம் 2, சுகம் 6, துக்கம் 3.

**9. தனுசு :- மூலம் , பூராடம் - உத்திராடம் $\frac{1}{4}$**
(யே. யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே.)

தனுர்ராசு 9 பாதங்களும் மிச்சிரபலஞக நடக்கும். குடும்பாபி விருத்தியில் ஓரளவு பண வசதியும் சௌகரியமும் இருந்துவரும். வித்துவத்துவம் கலைத்துறையில் புகழ் உண்டாகும். சகோதரரின் உடலில் வாத வாயுவினல் நலிவுவந்து உடன் குணமாகும். மாதாவின் நலம் நன்ருக இருந்துவரும். பிதாவிற்கு இரத்தக்குறைவிஞல் நலிவுஏற்பட்டு உடன் சௌக்யமாகும். ஞாயிற்றுக்கிழமை சூரியார்ச்சனை செய்ய நலம் தரும். சித்திரைமீ 19உ 35 நாழிகை 43 விஞடி முதல் 22உ 4 நாழிகை 31 விஞடி வரையில் சந்திராஷ்டமம். செவ்வாய் புதன் சுபமாகும்.

சித்தார்த்தி வருஷத்திய இராசி ஆதாயம் 14, விரயம் 11, ஆரோக்கியம் 3, அஞரோக்கியம் 2, இராஜபூஜிதம் 3, இராஜ கோபம் 5, சுகம் துக்கம் சமம்.

**10. மகரம் :- உத்திராடம் $\frac{3}{4}$ - திருவோணம் - அவிட்டம் $\frac{1}{2}$**
(போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. - கா. கி.)

மகரராசி 9 பாதங்களும் மிச்சிரபலஞக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பண வருமானங்கள் வந்துகொண்டிருக்கும். சகோதரர் சகோதரிகள் சௌக்கியத்துடன் இருந்துவருவார்கள். வீடுவாகனுதிகளின் சௌகரியம் நன்ருகஇருந்துவரும். வித்தியாவியாபாராதிகளில் வைத்தியம் சித்திரக்கலையில் முன் பிரயாசையாயினும் 17உக்கு

மேல் சிறந்த பலன்களை ஏற்படுத்தும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். சித்திரைமீ 22உ 4 நாழிகை 31 விஞடிமுதல் 24உ 33 நாழிகை 11 விஞடிவரையில் சந்திராஷ்டமம். வியாழன் வெள்ளி சுபமாகும்.

சித்தார்த்தி ஞூத்திய இராசி ஆதாயம் 2, விரயம் 8, ஆரோக்கியம் 6, அஞரோக்கியம் 4, இராஜபூஜிதம் 4, இராஜகோபம் 2, சுகம் 6, துக்கம் 3.

### 11. கும்பம் :- அவிட்டம் $\frac{1}{2}$ – சதயம் - பூரட்டாதி $\frac{3}{4}$

( கு, கே. - கோ. ஸ. ஸி. ஸு. - ஸே. ஸோ. தா. )

கும்பராசி 9 பாதங்களும் மிச்சிர பலனுக நடக்கும், குடும்பாபிவிருத்தியில் பணச்செலாவணிகள் நன்ருயிருந்து வித்துவத்துவத்தில் சிறப்பு தரும். அவசரவார்த்தைப் பிரயோகத்தால் முன்காரியம் தடைபட்டு பின் நிறைவேறும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும், சித்திரைமீ 24உ 31 நாழிகை 11 விஞடி முதல் 26உ 58 நாழிகை வரையில் சந்திராஷ்டமம். சனி, ஞாயிறு சுபமாகும்.

சித்தார்த்தி ஞூத்திய இராசி ஆதாயம் 2. விரயம் 8, ஆரோக்கியம் 6, அஞரோக்கியம் 4, இராஜபூஜிதம் 4, இராஜகோபம் 2, சுகம் 6, துக்கம் 3.

### 12. மீனம் :- பூரட்டாதி $\frac{1}{4}$ – உத்திரட்டாதி – ரேவதி.

( தி. - து. ஸ. ச. த. - தே. தோ. ச. சி. )

மீனராசி 9 பாதங்களும் சுப பலன் தரும், குடும்பாபிவிருத்தியில் போதிய பண வருமானங்கள் வந்துகொண்டிருக்கும். சகோதர சகோதரிகள் நலமுடன் இருந்து வருவர். வீடு வாகனுதிகளில் நல்ல சௌகரியங்களை ஏற்படுத்தும், வித்தியா வியாபாராதி கலைத்துறைகளில் 17உக்கு மேல் நற்பலன்கள் வந்துசேரும். புத்திரனுக்கு நன்மை ஏற்படும். தாம்பத்திய வாழ்வில் மகிழ்ச்சி நிலவும். சித்திரை மாதம் 26உ 58 நாழிகை முதல் 29உ 16 நாழிகை 57 விஞடி வரையில் சந்திராஷ்டமம். செவ்வாய், புதன் சுபமாகும்.

சித்தார்த்தி ஞூத்திய இராசி ஆதாயம் 14, விரயம் 11, ஆரோக்யம் 5, அஞரோக்கியம் 2, இராஜபூஜிதம் 3, இராஜகோபம் 5, சுகம், துக்கம் சமம்.



# சித்திரை மாதச் சிறப்பு நாட்கள்

14—4—79 சனி தமிழ் வருஷப்பிறப்பு. வேளூர் ஸ்ரீ வைத்தியநாத சுவாமி சீதள கும்பம் ஆரம்பம். சீகாழியில் உச்சிக்காலத்தில் ஸ்ரீ உமாமகேசுவரருக்குப் புழுகாப்பு. திருக்கடவூர் ஸ்ரீ கால சம்ஹாரமூர்த்திக்கு அபிஷேகம். விஷுபுண்யகாலம், திருவையாற்றில் விஷுபுண்யகால தீர்த்தம்.

15—4—79 ஞாயிறு, சங்கடஹர சதுர்த்தி.

20—4—79 வெள்ளி, ஸ்ரீ நடராஜர் அபிஷேகம், காளாஷ்டமி.

22—4—79 ஞாயிறு, ஸ்ரீ அப்பர்சுவாமிகள் குருபூஜை. திருவாமூரில் ஸ்ரீ அப்பர்சுவாமிகளுக்கு விசேஷ வழிபாடு.

25—4—79 புதன், போதாயன அமாவாசை.

26—4—79 வியாழன், அமாவாசை.

28—4—79 சனி, வேளூர் கிருத்திகை தருமபுரம் ஸ்ரீ தருமபுரீஸ்வரராலயத்தில் ஸ்ரீ ஷண்முகருக்கு கிருத்திகை விசேஷம்.

29—4—79 ஞாயிறு, காரைக்கால் தருமபுரம் ஸ்ரீ யாழ்மூரிநாதசுவாமி சம்வத்ஸராபிஷேகம், அக்ஷய திருதியை.

1—5—79 செவ்வாய், திருக்கடவூர், சீகாழி, திருப்பனந்தாள், திருவையாறு முதலிய தலங்களில் சைத்ரோத்ஸவ துவஜாரோகணம்.

2—5—79 புதன், சீகாழியில் ஸ்ரீ திருஞானசம்பந்தர் அபிஷேகம், திருமுலைப்பால் உற்சவம். காலையில் உமாமகேசுவரர் புழுகாப்பு.

4—5—79 வெள்ளி, தருமையாதீனம் 23 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ஜன்ம நக்ஷத்திர விழா (ஆயில்யம்), அக்னி நக்ஷத்திரம் ஆரம்பம், 30-16.

5—5—79 சனி, சைத்ரோற்சவ ரிஷபவாகனக் காட்சி, திருக்கடவூர் ஸ்ரீ காலசம்ஹாரமூர்த்தி அபிஷேகம், திருவையாற்றில் ஆத்ம பூஜை, திருச்சியில் ஸ்ரீ மாத்ருபூதேசுவரர் ரத்னவதிக்குத் தாயாக வருதல்.

6—5—79 ஞாயிறு, திருக்கடவூர் ஸ்ரீ காலசம்ஹாரமூர்த்தி அபிஷேகம், இரவு காலசம்ஹாரக் காட்சி.

7—5—79 திங்கள், சித்திரைத் திருவிழாவில் திருக்கல்யாண விழா, தருமை ஸ்ரீ ஞானபுரீஸ்வரசுவாமி மஹோத்ஸவ அனுக்ஞை முதலிய பூர்வாங்கம்.

8—5—79 செவ்வாய், தருமை ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி மஹோற்சவ துவஜாரோஹணம். திருக்கடவூர் முனீஸ்வரர் பூஜை.

9—5—79 புதன், வேளூரில் மஹந்தியாஸபூர்வக மண்டலாபிஷேக ஆரம்பம் ஸ்ரீ உமாபதிசிவாசாரியார் குருபூஜை. பிரதோஷம் சைத்ரோத்ஸவம் திருத்தேர்.

10—5—79 வியாழன், திருக்கடவூர், சீகாழி, திருப்பனந்தாள், திருவையாறு முதலியதலங்களில் சைத்ரோத்ஸவதீர்த்தம். குத்தாலத்தில் பஞ்சமூர்த்திகள் காவிரியில் தீர்த்தம் கொடுத்தல்.

11—5—79 வெள்ளி, பௌர்ணமி, மாதபூஜையில் மருக்கொழுந்து சாத்துதல்.

12—5—79 சனி, திருவையாறு, கும்பகோணம் சப்தஸ்தானம், தருமை ஸ்ரீ ஞானபுரீசுவரர் சகோபுர ரிஷபவாகனக் காட்சி.

உ



திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

வேளூர்தேவஸ்தானம், வைத்தீசுவரன்கோயில்

# ஸ்ரீ செல்வமுத்துக்குமார சுவாமிக்கு

சித்தார்த்தி ஆண்டில்

மாதந்தோறும் நடைபெறும்

கிருத்திகா நட்சத்திர

## அபிஷேக நாள் விபரம்

| | | | |
|---|---|---|---|
| சித்திரை | 15 | 28—4—79 | சனிக்கிழமை |
| வைகாசி | 11 | 25—5—79 | வெள்ளிக்கிழமை |
| ஆனி | 8 | 22—6—79 | வெள்ளிக்கிழமை (மண்டலாபிஷேகக் கிருத்திகை) |
| ஆடி | 3 | 19—7—79 | வியாழக்கிழமை |
| ஆடி | 30 | 15—8—79 | புதன்கிழமை |
| ஆவணி | 27 | 12—9—79 | புதன்கிழமை |
| புரட்டாசி | 23 | 9—10—79 | செவ்வாய்க்கிழமை |
| ஐப்பசி | 19 | 5—11—79 | திங்கட்கிழமை |
| கார்த்திகை | 17 | 3—12—79 | திங்கட்கிழமை |
| மார்கழி | 15 | 30-12—79 | ஞாயிற்றுக்கிழமை |
| தை | 12 | 26—1—80 | சனிக்கிழமை |
| மாசி | 10 | 22—2—80 | வெள்ளிக்கிழமை |
| பங்குனி | 8 | 21—3—80 | வெள்ளிக்கிழமை |

குறிப்பு :— திருவிளக்கு அறக்கட்டளை நிதிக்குத் தொகை செலுத்தி அருள்பெறுக. விபரம் தேவஸ்தானம் அலுவலகத்தில் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம்.